

கே. இந்துமதி, கோயமுத்தூர்



என். சாவித்திரி, தஞ்சாவூர்



வி. ஜி. வரதராஜன், திருமலைராயன் பட்டினம்



எஸ். சுப்பிரமணியன், முசிறி



டாக்டர் இவாஞ்சலின், திண்டுக்கல்



ஜோன்ஸ், திண்டுக்கல்



பி. சந்திரசேகரன், பெங்களூர்



சாலமோன், சென்னை-5



பி. பாலசந்திரன், பம்பாய்



வி. உஷா, கடலூர்





பி. மணிகண்டன், சென்னை-4

# இருகோடுகள்

## வென்றிக் கலைஞர்கள்

# பிரச்சினைகளை ஊதிவிடாதீர்கள்!

## வட்டமேஜை

● 'ஈஸ்வர அல்லா தேரே நாம்' என்ற சொல்லை நாலுக்காக எழுதிவிட்டு எந்த விதமான பிரச்னையிலும் தலையிடாத எங்கள் மதத்தைப் புகழ்வது போல் இகழ்ச்சியாக எழுதியிருக்கிறீர்கள். தீண்டாமை என்ற சொல்லுக்கே எங்கள் மதத்தில் இடமில்லை. எங்கள் மதத்தில் எல்லோரும் ஓர் இனம். இது இன்றல்ல நேற்றல்ல வழி வழியே வந்த பண்பாடு.

திருநெல்வேலி — ஏ. மொகைதீன் கான்

● ஒரு மதத்தைச் சார்ந்தவர்களுக்குள்ளேயே வேறுபாடு பாராட்டிப் பிரித்து நிற்கின்ற பேதைமையைக் கண்டுதான் நாத்திகர்கள் நகைக்கின்றனர். கிறிஸ்தவர்கள் நிறுவனங்கள் வாயிலாக மதத்தைப் பரப்புகின்றனர் என்பதை முழுமையாக நம்புகிறீர்களா? அன்புக்காக ஏங்குவாரின் வேதனைகளைத் துடைப்பதால் ஏன் மதம் மாறியிருக்க மாட்டார்கள்? மதமாற்றமல்ல; மனித மாற்றமே எங்கள் நோக்கம்.

மண்டைக்காட்டில் நடந்தது இந்துக்களின் பதற்ற நிலைமையின் விளைவா? சிறுபான்மையினர் வேதனையின் வெளிப்பாடா? தங்களைப் போன்றவர்கள் மேலும் மேலும் பிரச்னைகளை ஊதிவிடாமல் இருந்தால் சரியே.

கருங்கண்ணி — பி. ஸ்தனிஸ்லாஸ்

● மதம் மாறுவதற்கு மாஜிஸ்திரேட் ஒப்புதல் வேண்டும் என்று எழுதியுள்ளீர்கள். இதே முறையில் ஓ. பி. தியாகி அவர்களின் மசோதா ஜனதா காலத்தில் எடுத்துக்கொள்ள இருந்தது. அப்பொழுதே கிறிஸ்தவர்கள் கூட்டங்கள் போட்டு மதம் மாற்றுவதற்கு (எப்படியாவது) உரிமை இல்லை என்றால், ஹிந்துக்களைத் தெருவில் சந்திப்போம் என்றார்கள். ஹிந்துக்கள் வாழும் பகுதிகளில் விளம்பரப் பலகைகள் மூலமாகவும் சுவரொட்டிகள் மூலமாகவும் பிரசங்கங்கள் மூலமும் அநாகரிகமாய்ப் பேசுகிறார்கள். இதனால் இந்துக்களும் மாநாடு கூட்டி நாம் ஆடுகள் அல்ல, சிங்கங்கள்; பாவிகள் அல்ல அம்ருதஸ்ய புத்திரர்கள், விபசாரிகள் அல்ல புராதன சனாதன தர்மத்தைக் கடைப்பிடிக்கும் தர்மவான்கள் என்று பேச வேண்டியதாக இருக்கிறது. நிலைமை இப்படி இருக்க அரசாங்கமோ நம்மை ஆர்.எஸ்.எஸ். காரர்கள் என்று கூறிக் கண்டிக்கிறது.

சென்னை-33 — கே. ரமணி

● நாளுக்கொரு புதிய தர்க்காவும் கிறிஸ்தவ ஆலயமும் நிர்மாணிப்பதில் அந்நியப் பொருளாதாரம் வெகு சுதந்திரமாக வாரி வீசப்படுகின்றது.

வறுமையில் வாழும் நம் மக்களுக்கு உதவி என்ற பெயரில் அவர்கள் செலவிடும் பொருளாதாரம், முற்றிலும் மத மாற்றத்துக்கு மட்டுமே என்பது சிறிதுகூடக் கலப்பற்ற உண்மை.

நமது அரசின் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தை யொட்டி அறுவைச் சிகிச்சை செய்து கொண்டவர்கள் பட்டியலில் நான் அறிந்தவரை இந்துக்கள் மட்டுமே உள்ளனர். இதையும் இந்து மதமோ மதத் தலைவர்களோ எதிர்த்ததில்லை. நாட்டின் மக்கள் தொகை கட்டுப்படுத்தப்பட வேண்டியதில் நமக்கு மாற்றுக் கருத்தில்லை.

அதே நேரத்தில் நாம் நொடிக்கு நொடி மைனாரிட்டி சமூகமாக மாறிக்கொண்டிருக்கிறோம் என்பதை யாரும் உணர்ந்ததாகவும் தெரியவில்லை.

திருவாரூர் — ஜெ. ஜெயராமன்

● கிறிஸ்தவ – முஸ்லிம் மதம் பரவுவதற்கான 'வசதிகள்' வரும் வழியினை நாம் கொள்ளாவிடினும் பகவான் பாபா அவர்களைப் போல் நம் மத ஆச்சாரியார்களும் கல்வி, மருத்துவம் போன்ற அத்தியாவசிய வசதிகளையாவது செய்ய முன்வருவார்களேயானால் நம் இந்துக்களும் மாற்றான் தோட்டத்து மல்லிகைக்கு ஏங்கிக் கொண்டிருக்க மாட்டார்கள். இதைப் பெரியவர்கள் தயவு செய்து கொஞ்சம் சிந்திக்க வேண்டும்.

வீரபாண்டி — வறிஞ அன்புச்செல்வன்

● சிற்பக் கலையில் தன்னிகரற்றதும், புனிதத் தன்மையில் தஞ்சை மக்களுக்கே கண் போன்றதுமான பிரகதீஸ்வரர் ஆலயத்தில் சென்ற மாதம் "காதல் ஓவியம்" படத்தின் படப் பிடிப்பு நடத்தினார்கள். இதற்கு முன்னர், கோயிலைக் கட்டிய மன்னனின் வாழ்க்கையைப் படமெடுக்க (ராஜ ராஜ சோழன்) கோயிலின் உள்ளே அனுமதி மறுக்கப்பட்டது. கோயிலைக் கட்டிய மன்னனின் சிலையையே கோயிலின் உள்ளே அமைக்க அனுமதி மறுக்கப்பட்டு வெளியில் ஓர் ஓரத்தில் வைத்திருக்கிறார்கள். இதற்கு மட்டும் எப்படி அனுமதி வாங்கினார் பாரதி ராஜா? இந்து அறநிலையத் துறை மற்றும் அரசாங்கம் இதற்கு விளக்கம் கூறுமா?

கருத்தட்டான்குடி — ச. சந்திரசேகரன்

● பத்திரிகை ஆபீஸில் நுழைந்தறியாத எனக்கு அங்கு நடக்கும் சிறிய விஷயத்தைக் கூட அக்கு வேறு ஆணி வேறாகப் பிரித்துத் தமது டயலாக் மூலம் உணர்த்திவிட்டார் அகஸ்தியன்.

திருவெட்டாறு — நெல்லைமுத்து

# அஞ்சறைப் பெட்டி

பிரபல கார்டூனிஸ்ட் ஆர். கே. லட்சுமணனை இங்கிலாந்திலுள்ள பல பத்திரிகைகள் வருந்தியழைத்தன. ஆனால் அவர் போகவில்லை. அதற்கு அவர் கூறிய காரணம்: "அரசியல் இங்கே மாதிரி அங்கே சுவாரஸ்யமாக இல்லை."

- அனிதா ராமச்சந்திரன்

### இவருக்கும் புரியாது, அவருக்கும் தெரியாது!

ஆடம்ஸ்சாலையில் தொலைக்காட்சி நிலையம் அருகில் அயல் நாட்டு தொடர்பு அலுவலகம் (Overseas Communication Building) புதிதாககட்டப்பட்டுள்ளது. இங்கே அலுவலகத்தின் பெயரை VIDESH SANCHAR BHAVAN என்று எழுதியுள்ளார்கள். ஹிந்தி மட்டும் அறிந்தவர்கள் இந்தப் போர்டைப் படிக்க முடியாது. ஏனெனில் எழுத்துக்கள் ஆங்கிலத்தில். ஆங்கிலம் மட்டும் அறிந்தவர்களோ போர்டைப்படித்தாலும் விஷயம் புரியாது! -எஸ். சுமதி



இங்கிலாந்து நாட்டில் முன்பு குதிரை பூட்டிய வண்டிகள் (Chariot) அதிகம். அதில் வண்டி ஓட்டுபவர் வலதுபுறம் அமர்ந்திருப்பார். அவரது சாட்டை சாலை ஓரமுள்ள வேலியில் சிக்கிக் கொள்ளாமல் இருக்கும் பொருட்டு இடப்புறம் ஓட்டிச் செல்வது வழக்கம். இதிலிருந்துதான் சாலையின் இடது புறம் வாகனங்கள் செல்லும் விதி ஏற்பட்டது! -தேவாதிராஜன்

"குமுதாவையும் அமுதாவையும் பெண் பார்த்தியே..."

"அமுதாவை விட, குமுதாவிடம் குறைந்தபட்சம் ஆறு வித்தியாசம் தெரிகிறது!..."

—சுதர்ஸன்





### ஒரே ஒரு சிறு கதை!

ரொம்பப் பிரபலமான எழுத்தாளர்; ஆனால் வாழ்நாளில் எழுதியதென்னவோ ஒரே ஒரு சிறுகதைதான்!

யார் அந்த அதிசய எழுத்தாளர்?

தினமணி ஆசிரியர் ஏ. என். சிவராமன்தான்!

அவர் நீண்ட காலம் முன்பு எழுதிய அந்த ஓரே ஒரு சிறுகதையின் தலைப்பு: 'நாலு அவுன்ஸ் பிராந்தி!'

தகவல்: ஏ. சுவாமிநாதன்


தமிழ் நாடு
சட்ட மன்றம்


தமிழ் நாடு
சட்ட மன்றம்


தமிழ் நாடு
சட்ட மன்றம்


சஞ்சய்.. எம் புள்ளை தெரிஞ்சுக்க!...
சஞ்சய் எம் புருஷன் புரிஞ்சுக்கோ!


ஜப்பான் மோசம்!.. அமெரிக்கா அதைவிட மோசம்!.. ஒரே கொலை, கொள்ளை, கற்பழிப்பு!.. தமிழ் நாட்டைப் பாருங்க!... ஒண்ணும் கிடையாது!



# தலையங்கம் - எதைப்பற்றி?

**யோசனை 1:** அஸ்ஸாம், விலைவாசி உயர்வு, வேலை இல்லாத் திண்டாட்டம் போன்ற பிரச்னைகள் அனைத்தையும் பின்னணிக்குத் தள்ளிவிட்டு இன்று முதலிடம் பெற்றிருப்பது மாமியார் மருமகள் சண்டைதான். ''சக்கரவர்த்தினி என்று என்னை இன்னுமா அழைப்பது?'' என்று லண்டனில் குறைப்பட்டுக் கொண்ட பிரதமர் இல்லத்தில்தான் இந்த வாரிசு உரிமை பிரச்னை பூதாகாரமாகத் தலையெடுத்திருக்கிறது! பிரதமர் கூறுவதுபோல் மேனகா ஆர்.எஸ்.எஸ். வலையில் விழுந்து விட்டார் என்றே கொண்டாலும் முன்பு சஞ்சய் ராஜ்நாராயணனைச் சந்தித்த பிறகு ஜனதாவை உடைக்கும் பணியில் ராஜ்நாராயண் தீவிரமாக இறங்கியது போல் இப்போது இந்திரா காங்கிரஸை உடைக்க இந்திராவின் எதிரிகள் முயன்றால் அதில் வியப்பென்ன? சரித்திரம் திரும்புகிறது அவ்வளவே.

**யோசனை 2:** என். டி. ராமராவ் கட்சி ஆரம்பித்திருக்கிறார். பிரேம் நஸீரும் அரசியலில் குதிக்கப் போவதாய் அறிவித்திருக்கிறார். கர்நாடகத்தில் ராஜ்குமாரும் அரசியல் அரங்கில் ஏறிவிட்டால் தென்மண்டலம் முழுவதும் சினிமாக் கலைஞர்களின் அரசியல் அமர்க்களப்படும். அரசியலே சினிமாவாகிவிட்ட பின் சினிமா கலைஞர்கள் அரசியலில் ஈடுபடுவதில் தவறென்ன?

**யோசனை 3:** ஜப்பான் அல்லது அமெரிக்காவைவிட தமிழ்நாட்டில் குற்றங்கள் மிகக் குறைவே என்று கூறி நமது போலீஸைத் தட்டிக் கொடுத்திருக்கிறார் எம். ஜி. ஆர். இதில் போலீஸுக்கு என்ன பெருமை? தமிழ் மக்களின் நன்னடத்தைக்கல்லவோ அத்தாட்சி? அங்கே எத்தனை சதவித குற்றங்கள் புலனாய்வில் கண்டு பிடிக்கப்பட்டன இங்கு எத்தனை சதவிதக் குற்றங்களில் குற்றவாளிகள் தண்டனைக்குள்ளாகிறார்கள் என்று முதல்வர் கணக்குத் தந்திருந்தால் நமது போலீஸின் திறமையை நம்மால் எடைபோட முடியும். போகட்டும், இதையும் விட்டுத் தள்ளுங்கள்.

**யோசனை 4:** அரசியல் கோமாளித் தனங்களை ஒதுக்கிவிட்டு ஓர் அன்பு மயமான உள்ளத்தைப்பற்றி எழுதினால் என்ன?



சாந்தா மிக அன்புடன் ஒரு நாய் வளர்த்தார். அதற்கு ரத்தப்போக்கு இருந்தது. எஸ்.பி.ஸி.ஏ. உதவியை நாடினார். மிருக வைத்தியர்கள் பார்த்து, புற்றுநோய் என்றனர். ஆபரேஷன் செய்தாலும் குணமாவது கஷ்டம் என்றாலும் சஸ்திர சிகிச்சை நடந்து இறைவனருளால் அது பிழைத்தும் விட்டது!

தமது நாயைப் பிழைக்க வைக்க எஸ்.பி.ஸி.ஏ. உதவியை நாடிய கையோடு சாந்தா அதன் உறுப்பினராகி உழைக்கவும் தொடங்கினார். பாரம் அதிகமாக இழுக்கும் கட்டைமாட்டு வண்டியைப் பார்த்தால் நடுத்தெருவில் வண்டியோட்டியுடன் வாதாடி வெற்றி பெறுவார். பஞ்சரான டயர் சக்கரத்துடன் ஒரு மாட்டு வண்டியைப் பார்த்தால் அந்தச் சக்கரத்தைத் தம் சொந்தச் செலவில் செப்பனிட்டுத் தருவார். கவர்னரையும் நகராட்சி, போலீஸ் அதிகாரிகளையும் அடிக்கடி நேரில் பார்த்துப் போராடி எஸ்.பி.ஸி.ஏ. பணிகளில் அரசின் ஒத்துழைப்பைப் பெற்றார். வண்டி இழுக்கும் மிருகங்களுக்குச் சென்னை நகராட்சி தண்ணீர் தொட்டிகள் அமைக்க ஏற்பாடு செய்தார். எஸ்.பி.ஸி.ஏ யின் மிருக வைத்திய ஆஸ்பத்திரியின் ஆபரேஷன் தியேட்டருக்கு 10,000 பெறுமானமுள்ள ஏர் கண்டிஷனரை நன்கொடையாகப் பெற்றுத் தந்தார்.

இப்படி வாயில்லா ஜீவன்களுக்காகத் தம்மை வருத்திக் கொண்டு அரும்பணியாற்றிய சாந்தா சென்ற ஆண்டு பிப்ரவரி மாதத்தில் இறந்தார். அவர் உயிரைக் குடித்தது.... புற்றுநோய்! சாந்தாவின் உருவப்படத்தை அண்மையில் எஸ். பி. ஸி. ஏ. தன் கேந்திரத்தில் திறந்து வைத்தது.

மக்களை மாக்களாகக் கருதும் சுயநலமிகளே தலைவர்களாயுள்ள இன்றைய சூழலில் மாக்களையும் மக்கள்போல் கருதிய தலைவி சாந்தாவுக்கு நமது கரம் கூப்பிய அஞ்சலி.

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

கல்கி
1982 ஏப்ரல் 11
துன்மதி பங்குனி 29
மலர்: 40 இதழ்: 37

**13**

"என்ன தண்டனை வழங்கலாம்? நீயே சொல்லு" என்று குற்றவாளியைப் பார்த்தே மன்னர் கேட்ட அந்த விநோத வழக்கு பற்றிய விவரங்கள் வாய்மொழியாகவே கூடல்மா நகரெங்கும் பரவி விட்டது. மன்னர் தந்த இந்த நல் வாய்ப்பைப் பயன்படுத்தி இலேசான தண்டனையோடு தப்பி விடாமல்

# ரவிகுல திலகன்

## செம்பியன்



அந்தச்சீன தேசத்து மல்லன் தனக்குத்தானே மிகக் கடுமையான தண்டனை விதித்துக் கொண்ட செய்தியும் காட்டுத் தீ போல் வேகமாகப் பரவி மக்களிடையே பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது. இதனால் அரண்மனைப் பூங்காவை அடுத்து இருந்த விசாலமான மைதானத்தில் மக்கள் பெருந் திரளாக வேடிக்கை பார்க்கக் குழுமி விட்டனர். அவர்களை ஒழுங்குபடுத்திக் கட்டுப்பாடாக

வைத்திருக்கப் பாண்டியப் படை வீரர்கள் அணிவகுத்து நின்றனர்.

ஒருபுறம் அரண்மனையிலிருந்து மன்னர் பிரான் வருவதற்கு வழி ஒதுக்கப்பட்டிருந்தது. இன்னொரு புறம் கைதிகளை அழைத்து வரவும் பாதை விடப்பட்டிருந்தது.

போர் யானை ஒன்று நன்கு அலங்கரிக்கப்பட்டு மைதானத்தின் மத்தியில் தும்பிக்கையைச் சதா அசைத்தவாறே நின்றிருந்தது. யானைப் பாகன் ஒருவன் அதன் அருகே உத்தரவு யாதாயினும் நிறைவேற்றச் சித்தமாயிருந்தான். வைணவக் குறி பொறித்த. ரத்தினங்கள் இழைத்த பொன்னாலான முகபடாமும், தந்தங்களுக்கு வெள்ளிப் பூணும் மஞ்சள் கறையுடன் முதுகிலிருந்து தொங்கிய பச்சை நிறப் பட்டில் இரு புறமும் தெரிந்த மீன் சின்னங்களும் அதனைச் சக்கரவர்த்திக்கே உரியதாக்கின.

''அடேடே! பட்டத்து யானையே வந்து நிற்கிறதே!'' என்று மக்கள் வியந்து பேசிக் கொண்டார்கள்.

''அதோ! கைதிகள் அழைத்து வரப்படுகிறார்கள்!'' என்று முன் வரிசையிலிருந்த சிலர் கூற, அவர்களுக்குப் பின்னாலிருந்தோர் குதிகால்களை உயர்த்தி எம்பிப் பார்க்க, பலத்த காவலுக்கிடையில் குவளையும் மற்றவர்களும் நடந்து வருவது தெரிந்தது.

சீனன் சும்மா யிராமல் யானை அருகே வந்தபோது அதனைத் தட்டிக் கொடுக்க மக்களிடையே சிலர் சிரிக்கவும் சிலர் வியக்கவும் செய்தார்கள்.

''ஆகா! கூற்றத்திடமே கொஞ்சிக் குலாவுகிற இவன், அஞ்சா நெஞ்சன்தான்!''

''பலசாலியும் கூட!''

''எத்தனை பலசாலியானால் என்ன? அசடனாய் இருக்கிறானே! கஜேந்திரன் காலடியில் மிதிபட்டுச் சாகத் துணிந்திருக்கிறானே!''

''இவன் அசடுமில்லை, கெட்டிக்காரனுமில்லை. பார்க்கப் போனால் இவனாக எதை



யுமே முடிவு செய்வதில்லையாம். இவர்கள் எல்லாருமே அந்தப் பெண் குவளை சொல்கிற படிதான் கேட்பார்களாம்!''

''அவள் காலால் இட்ட பணியைத் தலையால் நிறைவேற்ற நானும்தான் காத்திருக்கிறேன்! அடேயப்பா! என்ன அழகு அவள்! அந்தக் கண்கள் மட்டுமே போதும், குவளை என்ற பெயருக்கு ரொம்பப் பொருத்தம்!''

''உனக்குத் தெரியுமா? அந்தக் கண்கள் நமது இளவல் வரகுணனையே மயக்கி விட்டனவாம்!''

''சீச்சீ, ஏதாவது உளறாதே!''

''அடாடா, நகர்க் காவலர்களே பேசிக் கொண்டிருக்கிறார்கள் ஐயா! கடந்த இரண்டு நாட்களில் மூன்று தடவை அவளைப் போய்ப் பார்த்துவிட்டு வந்திருக்கிறார் சக்கரவர்த்தித் திருமகன்!''

இப்படி விதம் விதமாக மக்கள் பேசிக் கொண்ட பலவற்றில் ஓரளவு உண்மை இல்லாமலும் போகவில்லை.

தர்மாசனத்தில் அமர்ந்து மாமன்னர் வழக்கைக் கேட்பதற்கு முன் மூன்று நாட்கள் குவளையும் மற்றவர்களும் சிறையில் இருக்க நேர்ந்ததே அவர்கள் செய்த சிறு குற்றத்துக்குப் போதிய தண்டனை என்று கருதினான் வரகுணன். எனவே அவர்களை மேலும் சிறையில் தள்ளாமல் தனது விருந்தினர் மாளிகையில் காவலில் வைத்தான். மூன்றல்ல, நான்கு தடவை அவர்களைப் போய்ப் பார்த்து வரவும் செய்தான்.

குறிஞ்சி நில மகளான குவளையிடம் இருந்த ஓர் அசாதாரணக் கவர்ச்சி அவனை ஈர்த்தது. அந்தக் கண்களுக்கு ஒரு வசீகர சக்தி இருந்தது. இதழ்களில் புன்முறுவலுடனும் கண்களில் குறுஞ் சிரிப்புடனும் அவனை அவள் பார்த்தபோது ஒவ்வொரு முறையும் அவன் இருதயத் துடிப்பு அதிகரித்தது. அவள் தனது அளவான இளம் நெஞ்சகங்கள் விம்மித் தணிய பெருமூச்சு விட்டாலோ இவன் இதயம் சில கணங்கள் துடிப்பதையே மறந்தது! ''ஐயா! இந்த ஏழைகள்பால் தாங்கள் காட்டும் கருணைக்கு என்ன கைம்மாறு செய்யப் போகிறோம்!'' என்று அவள் தனது வெற்றிலைச் சாறு ஊறிச் சிவந்த வாயால் கேட்டபோது, அவன் தன்னையே மறந்தான். வாலிப வயதினனான வரகுணன் ஒரு பெண்ணிடம் உள்ள கவர்ச்சியை முதன் முதலாக அப்போதுதான் உணரத்தலைப்பட்டிருந்தான்: 'இவள் இடை ஏன் இப்படி நளிகிறது? இவள் தோள்கள் பார்வைக்குப் பட்டுப் போல் இருக்கின்றனவே, தொட்டுப் பார்த்தாலும் அப்படித்தான் இருக்குமா?' என்றெல்லாம் எண்ணங்கள் எழுந்து அலைக் கழித்தன.

அவளைச் சார்ந்திருந்த சினனுக்குத் துன்பம் நேர்ந்தால் அவளும் துயரில் ஆழ்ந்து போவாளே என்று கவலைப்பட்டான். அடிக்கடி விருந்தினர் மாளிகைக்குப் போய்ப் பேசினான். 'தற்கொலைக்கொப்பான இந்தக் காரியத்தில் இறங்க வேண்டாம்; மன்னிப்புக் கோரினால் மன்னர் உடனே விடுதலையளிப்பார்' என்றெல்லாம் எடுத்துச் சொன்னான்.

ஆனால் குவளை முகத்தைக் கோபமாக வைத்துக் கொண்டு, ''பிரபோ! இவன் சுத்த வீரன். பின்வாங்குவதை அறியாதவன். யானை காலடியில் நசுங்கிச் சாவானே தவிர பயந்து கோழையாக மாட்டான்'' என்றாள். மீண்டும் நெடுமூச்செறிந்தாள்.

அவளைக் கட்டி அணைத்துக் கன்னங்களில் உருளும் கண்ணீர் முத்துக்களைத் துடைத்து முத்தமிட்டு ஆறுதல் சொல்ல வேண்டும் போலிருந்தது வரகுணனுக்கு. ஆனால் அதற்குத் துணிவும் வராமல் தடுமாறினான் இளைஞன்.

இன்று, தண்டனை நிறைவேறப் போகின்ற தினத்தன்று காலை, சக்கரவர்த்தி நீராடி, வைணவத் திருச் சின்னங்களை அணிந்து, ஆடை அணிமணிகள் ஜொலிக்க, மைதானத்துக்குப் புறப்பட ஆயத்தமாக இருந்த சமயத்தில் வரகுணன் அவரை அணுகினான். தைரியமாகப் பேசுவதெனத் தீர்மானித்துக்

மங்கையர் மலர்
நங்கையர் விரும்பும் நன் மலர்

கொண்டு. ''அப்பா! சிறந்த நீதிமான் என்று பெயரெடுத்த தாங்கள் இதை எப்படி ஒப்புக்கொண்டீர்கள்?'' என்று ஆரம்பித்தான்.

''எதைச் சொல்கிறாய் மைந்தா?'' என ஒன்றும் புரியாதவர்போல் கேட்டார் ஸ்ரீவல்லபர்.

''அந்தச் சீனன் மீது யானையை ஏற்றுவது என்ற தங்கள் தீர்மானத்தைத்தான் குறிப்பிடுகிறேன்.''

''நானா தீர்மானித்தேன்? அது அவன் தனக்குத் தானே வழங்கிக் கொண்ட தண்டனையாயிற்றே!''

''அவன்தான் அசட்டுத்தனமாக அப்படிச் சொன்னாலும் உங்கள் நியாய உணர்வு அதற்கு இடம் தரலாமா? அவர்களுடைய வழக்கு விசாரணைக்கு வரு முன்னர் மூன்று நாட்கள் அவர்கள் சிறையில் இருக்க நேர்ந்ததே அவர்கள் செய்த சிறு குற்றத்துக்குப் போதிய அளவு தண்டனை ஆகிவிட்டதே!''

''தெரியும் குமாரா! அதற்காக நான் என்ன செய்ய வேண்டும் என்கிறாய்?''

'' 'இந்த விஷப் பரீட்சை வேண்டாம்' என்று உத்தரவிடுங்கள். அந்தச் சீனனுக்கு ஏதாவது நேர்ந்தால் அவனுடன் வந்திருக்கும் அனைவருக்கும் எவ்வளவு துயர் உண்டாகும்!''

''அதிலும் குறிப்பாக அந்தப் பெண் குவலீ மனமுடைந்து போவாள் இல்லையா?'' மாமன்னர் சிரித்தார், வாலிப உள்ளம் புரிந்தவராக.

''எதற்குச் சிரிக்கிறீர்கள் அப்பா?'' எரிச்சல் எட்டிப் பார்த்தது கேள்வியில்.

''மைந்தா! கொஞ்சம் யோசித்தால் சிரிக்க வேண்டிய விஷயம்தான் என்று உனக்கே புரியும். அந்தச் சீனனை வைத்துத்தான் அவர்கள் வித்தை காட்டியோ வீரம் காட்டியோ பரிசில்கள் பெறுகிறார்கள். அவனுக்கு ஏதும் நேர்ந்தால் அவர்கள் எதிர்காலமே பாதிக்கப்பட்டு விடும். இல்லையா? அவ்வாறிருக்க அந்தச் சீனன் இவ்வளவு கொடிய தண்டனையைத் தனக்குத் தானே ஏன் விதித்துக் கொண்டான்? குவலீ இதற்கேன் சம்மதித்து அவன் கருத்தை நமக்கு எடுத்துரைத்தாள்? வேண்டாம் என்று அவனிடம் இவளே வாதாடி இருக்கலாம் அல்லவா?'' வாளை இடையில் அணிந்து புறப்படத் தயாரானார் பேரரசர்.

அவரைப் பின்பற்றி வாசலுக்கு வந்த வரகுணன். ''எனக்குப் புரியவில்லையே அப்பா!'' என்றான்.

சக்கரவர்த்தியைச் சுமக்கப் போகிறோம் என்ற பெருமிதத்துடன் கம்பீரமான வெள்ளைக் குதிரை ஒன்று அங்கே சேணம் மாட்டப் பெற்றுச் சித்தமாய் நின்றது. அருகிலேயே இளவலின் புரவி. வரகுணன் தோள்களில் கைகளைப் பதித்தார் சக்கரவர்த்தி. ''குமாரா! உனக்குப் புரிய வேண்டியது இன்னும் எவ்வளவோ இருக்கின்றன. கண்ணன் கருணையால் உன் மனமும் அறிவும் விசாலப்படும்'' என்று கூறி வெண் புரவி மீது ஆரோகணித்தார். வரகுணனும் தன் குதிரை மீது தாவி ஏறி அமர்ந்தான். ''முருகன் அருள் இருந்தால் நடக்க முடியாதது ஏதுமில்லை, அப்பா!'' என்றான்.

குதிரையைச் செலுத்தியபடியே பேசினார் சக்கரவர்த்தி.

''வரகுணா! வேலின் முனையை விட ஒரு பெண்ணின் கண் வீச்சு கூர்மையானது. ஆபத்தானது. அதனை எதிர்த்து வெல்லும் சக்தியை நீ பெற வேண்டும். நமது அரசவை நர்த்தகி திருமேனிக்கு அரங்கிலேதான் நடிக்கத் தெரியும்: சில பெண்களுக்கு வாழ்க்கையிலேயே நடிக்கத் தெரியும்! பெண்களிடம் பழகும்போது நடிப்பு எது. நிஜம் எது என்று புரிந்துகொள்ளும் ஆற்றலை நீ வளர்த்துக் கொள்ள வேண்டும்!''

ஒற்றர் மூலம் தன்னைக் கண்காணித்து வந்திருக்கிறார் தந்தை என்றுணர்ந்த வரகுணன் கோபமுற்றான். வெட்கமாகவும் இருந்தது.

''அப்படியானால் அந்தப் பெண் குவலீ நாடகமாடுகிறாள் என்று சொல்கிறீர்கள்!'' என்று வியப்பும் வேகமுமாகக் கேட்டான்.

''உன் கேள்வியிலிருந்தே நீ என்னை முற்றிலும் நம்பவில்லை எனத் தெரிகிறது'' என்ற சக்கரவர்த்தி புன்முறுவலுடன் ''குமாரா! கவலைப்படாதே. அந்தச் சீனனுக்கு ஒரு

நீங்கும் நேராது. அந்தப் பெண் குவளைக்கும் எந்த விதமான மன வருத்தமும் இதுவரையில் நேரவில்லை; இனியும் நேரப்போவதில்லை'' என்றார்.

''அதெப்படி அவ்வளவு உறுதியாகச் சொல்கிறீர்கள் அப்பா?''

''பொறுத்திருந்து பார்! தண்டனை நிறைவேற்றப்படும்போது நீயே தெரிந்துகொள்வாய்'' என்ற ஸ்ரீமாறன் குதிரையைத்தட்டிவிட அது பாய்ந்தோடிய வேகத்துக்கு ஈடுகொடுக்க முடியாமல் இளவரசன் சற்றுத் திணறவே செய்தான்.

மைதானத்தை அவர்கள் அடைந்ததும் வாழ்த்தொலிகள் விண்ணை எட்டின.

''பரச்சக்கர கோலாகலன் வாழ்க! அவனிப சேகரன் வாழ்க! வாழ்க! சக்கரவர்த்தி குமாரர் வாழ்க!'' என்று எழுந்த கோஷங்கள் அடங்ியதும் கட்டியம் கூறுவோன் வாயிலாக நடந்தவற்றையும் இனி நடக்கப் போவதையும் மக்களுக்குச் சுருக்கமாக எடுத்துரைத்தார் மாமன்னர் ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபன்.

அதையடுத்து அங்கே கூடியிருந்த ஆயிரக்கணக்கான மக்களிடையே அசாதாரண அமைதி நிலவ, சீனன் குப்புறப் படுத்துக் கொண்டான். அவன் மீது ஒரு கனமான பலகையை வைத்தபோது குவளை அருகிருந்துஒழுங்குபடுத்தஅனுமதிக்கப்பட்டாள். இதன் பின்னர் கனத்த நிசப்தத்தினிடையே யானைப் பாகன் யானையைச் சீனன் அருகே கொணர்ந்து, அதன் ஒரு காலை இலேசாகத் தட்ட, அது அக்காலை சீனன் முதுகின் மேல் பலகையில் வைத்தது. அடுத்து இன்னொரு கால் பதித்தது! பிறகு மூன்று...! நான்கு!

நான்கு கால்களையும் அருகருகே இணைத்து வைத்து யானை இப்போது சீனன் முதுகின் மேல் ஏறி நின்று கொண்டிருந்தது! சீனன் பிறவி ஊமை என்பதால் அவன் வேதனைக் குரல் எழுப்பவும் முடியாது. குப்புறக்கிடந்ததால் அவன் முகத்தைப் பார்க்கவும் இயலவில்லை. பலகையின் கீழ் சீனன் என்ன ஆனான்? வேதனைப் பட்டுக் கொண்டிருக்கிறானா அல்லது வேதனையை உணர முடியாத சவமாகி விட்டானா? எலும்புகள் முறிந்தனவா? உடல் உறுப்புக்கள் நசுங்கினவா? எதையும் நிர்ணயிக்க முடியவில்லை. 'யானையை இறக்கி விடலாம்' என்று மாமன்னரிடமிருந்து இன்னும் உத்தரவு பிறக்கவில்லை.

அப்போதுதான் அந்த அதிசயம் நடந்தது! சீனன் லேசாக நெளிவது தெரிந்தது! அதை அடுத்து அவன் பெரு முயற்சி செய்து தன் கைகளை ஊன்றி உடலை உயர்த்துவது புரிந்தது! சில கணங்கள் சென்றன. மடிந்திருந்த முழங்கைகள் மெல்ல மெல்ல நீண்டன; நீண்டிருந்த முழங்கால்கள் படிப்படியாய் மடிந்தன. அதற்கேற்ப அவன் முதுகும் சிறிது சிறிதாய் உயர்ந்தது! யானையையும் உயர்த்தியது! இப்போது குழந்தை தவழ்வது போன்ற நிலையிலிருந்த சீனன், யானையை முதுகிலே சுமந்து கொண்டிருந்தான்.! யானை துதிக்கையை உயர்த்திப் பிளிறியது!

அது தன் நிலை மாறுவதால் ஏதொன்றும் புரியாமல் பிளிறியிருக்கலாம். ஆனால் அச்சமயம் அது சீனனின் வெற்றியை அங்கீகரித்துக் கும்பிக்கையை உயர்த்திப் பிளிறுவது போலவே தோன்றியது!

அடுத்த கணம் அந்தச் சத்தத்தை உள்ளடக்கிக் கொண்டு மக்களிடையே ஒரு பேராரவாரம் எழுந்தது! ''சீனன் வாழ்க! மல்லாதி மல்லன் வாழ்க! வீராதி வீரன் வாழ்க!''

''புரிந்ததா மகனே?'' ஸ்ரீமாறன், வரகுணனைத் திரும்பிப் பாராமலேயே கேட்டார்.

''புரிந்து கொண்டேன் தந்தையே! தன் ஆற்றலை வெளிப்படுத்த, பலத்தைக் காட்டச் சந்தர்ப்பம் எதிர்நோக்கியிருக்கிறான் சீனன். அறைகூவல் விடுக்க மார்க்கமில்லை; தண்டனையாகவே விதித்துக் கொண்டான்!''

சீனன் மீண்டும் மெல்ல மெல்லத் தரையோடு தரையாகத் தாழ்ந்து படுத்தான். யானையை இறக்கினான் பாகன்.

சீனன் எழுந்துநின்றபோது மீண்டும் வாழ்த்தொலிகள் விண்ணைஎாவின.

கட்டியம் கூறுவோனை அழைத்தார் சக்கரவர்த்தி. சீனனுக்கும் அவனுடன் வந்த மற்ற அனைவருக்கும் மன்னிப்பும் விடுதலையும் என அறிவிக்கச் செய்தார். அதுமட்டுமல்ல; அவர்கள் திருட்டுக் கொடுத்த இரு குதிரைகளுக்கு ஈடான வேறு இரு உயர் ஜாதிப் புரவிகளை அரண்மனை லாயத்திலிருந்து அவர்களே தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்! வேறு பல பரிசில்களும் வழங்கப்பெறும்! கொடையிலே குறுநில இளவரசன் விஜயாலயனுக்கு சக்கரவர்த்தித் திருமகன் வரகுணன் இளைத்தவன் அல்ல என்பதை அவர்கள் புரிந்து கொள்வார்கள்.

மக்கள் மகிழ்ச்சியுடனும் நிகழ்ச்சிகள் குறித்து வியப்புடனும் பேசிக் கொண்டே கலைந்து பிரிகையில் குவளையும் சீனனும் மற்ற மூவரும் சக்கரவர்த்தி அருகே அழைத்து வரப்பட்டனர்.

சீனன் குவளையிடம் ஏதோ சமிக்ஞை காட்ட, ''என்ன சொல்கிறான்?'' என்று முகத்தில் ஆனந்தம் பொங்கக் கேட்டார் ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபன்.

குவளை சற்றே தயங்குவது போல் காணப்பட்டாள்.

''பெண்ணே! ஏன் யோசிக்கிறாய்? எதுவானாலும் அஞ்சாமல் கேள்! உன் ஆசை பேராசையாய் இல்லாதவரை நிறைவேற்றித் தருகிறேன்!''

''கோரிக்கை ஏதுமில்லை ஐயா!''

''பின்னர்?''

'' 'பாண்டிய நாட்டு யானைகளுக்குச் சரியாக உணவிடுவது இல்லை போலிருக்கிறது; அவை மெலிந்து பலமற்றுக் கிடக்கின்றன' என்று இவன் கூறுகிறான். சுமந்து பார்த்தவன் சொல்லும்போது நம்பத்தானே வேண்டியிருக்கிறது!'' என்றாள் குவளை.

சக்கரவர்த்தியின் முகம் கறுத்தது.

(தொடரும்)

'சித்து', 'சித்தர்கள்' என்ற சொற்களைத் தமிழில் விரிந்த பொருளில் பயன்படுத்தி வருகிறோம். திடீரென ஒரு பொருளை வர வழைப்பது முதலாகக் கல்யானை ஒன்று கரும்பைச் சுவைக்குமாறு செய்யக் கூடிய வித்தை வரை எல்லாவற்றையும் 'சித்து' என்ற சொல்லால் குறிக்கிறோம். எந்த வித்தை மிக்க செயலையும் செய்யாது தன்னை வில் தான் கடவுளை உணரும் முயற்சியில் ஈடுபட்டுள்ள அருளாளர்களையும் 'சித்தர்கள்' என்றே குறிக்கிறோம். பொதுவாகச் சித்து என்பதற்கு 'அற்புதம்' என்ற பொருள் கொள்ள வேண்டும்.

தமிழ் மொழியில் சித்தர் பாடல்கள் பல உள்ளன.

சித்தர்கள் அனைவரும் தன்னைத் தானே உணர்ந்து, தனக்குள்ளே இறைவன் இருப்பதை உணர முயன்றவர்கள். கடவுள் விருப்பு வெறுப்பற்றவன். நானே கடவுள் என உணர்ந்தால் தனக்கும் விருப்பு வெறுப்பில்லை, இந்த உணர்வே இறைவன் என்று எண்ணினர். சித்தர்கள் கடவுளை உள்முகமாகத் தேடினர். அதனால் பூசை, விக்கிரக வழிபாடு ஆகிய புறச் செயல்களைக் கடவுளைத் தேடும் கருவிகள் என்றும், தனக்குள்ளே தான் இறையுணர்வைப் பெறுவதே முடிவு என்றும் கண்டனர். விருப்பு வெறுப்பற்ற உயரிய நிலையை ஒருவன் அடையாது, புறத்தே செய்யும் பூசைகளால் பயனில்லை எனக் கண்டித்தனர்.

நட்ட கல்லைத் தெய்வம் என்று நாலு புஷ்பம் சாத்தி, சுற்றி வந்து மொண மொணன்னு மந்திரம் சொல்வதைச் சித்தர்கள் தடுக்கவில்லை. அது இறையுணர்வைப் பெற ஒரு கருவி. நாதன் உள்ளிருப்பதை உணர வேண்டும். இலையில் பரிமாறி உண்ணப் பெறும் கறிதான் லட்சியம். அதைக் கிளறுகிற கரண்டி அல்லது சட்டுவம் ஒரு கருவி. சட்டுவமே கறியாகாது.

''நட்ட கல்லைத் தெய்வமென்று
நாலு புட்பம் சாத்தியே
சுற்றிவந்து மொண மொணன்னு
சொல்லும் மந்த்ரம் ஏதடா
நட்ட கல்லும் பேசுமோ?
நாதன் உள்ளிருக்கையில்
சுட்ட சட்டி சட்டுவம்
கறிச் சுவை அறியுமோ?''

இப்பாடலைப் பலரும் அறிவர். சிலர் 'நட்ட கல்லும் பேசுமோ?' என்பது வரை மட்டும் சொல்லி, சித்தர்கள் கடவுள் மறுப்பாளர்கள் என்று முத்திரை குத்துவதுண்டு. அது அவர்கள் தொழில்.

உணவிருக்கும் இடத்தைத் தேடித் தேடி நான்கு கோழிகளும் காட்ட, ஐந்து குஞ்சுகளும் கொத்திக் கொத்தி அனுபவிக்கின்றன.



# சாவல் நாலு குஞ்சு அஞ்சு

— ஞானி

நான்கு கோழிகளும் குஞ்சுகளுக்கு நல்ல பொருளை மட்டுமா காட்டுகின்றன? சாக்கடைப் புழு போன்ற பொருள்களையும் தான் காட்டுகின்றன. கோழி நான்கும் காட்டும் பொருள் எதையும் ஐந்து குஞ்சுகள் அனுபவிக்கின்றன.

இந்த நான்கும் ஐந்துமான கோழிக் கூட்டத்தின் மேய்ச்சல் எதுவரை? மாலை இருள் மயங்கும் நேரத்தில் காட்டிலிருந்து கிழ நரி புறப்பட்டு வரும்வரை. கிழ நரி நாக்கைத் தடவிக் கொண்டு வருகிறது. அது இந்தக் கோழிக் கூட்டத்தைச் சேர்ந்த ஒன்பதுக்கும் தெரியவில்லை. திடீரென்று கிழநரி வந்து ஒன்பதையும் உண்டுவிட்டுப் போய்விடுகிறது.

கோழிக்கு மட்டுமா இந்த வரலாறு?

மெய், வாய், கண், மூக்கு, செவி என்று நமக்கு ஐந்து புலன்கள் இருக்கின்றனவே! அவைதானே ஒவ்வொரு இன்பத்தையும் துய்க்கின்றன. அவை தானுகத் துய்த்து விடுவதில்லை. வெளியே ஐம்புலன்கள் இருப்பது போல, உள்ளே ஒரு நான்கு புலன்கள் இருக்கின்றன. அவை மனம், புத்தி, சித்து அகங்காரம். இவற்றை 'அந்தக் கரணம்', என்பர்.

ஒன்றை எண்ணுவது மனம்: அதனைச் செயல்படுத்தத் திட்டம் இயற்றுவது புத்தி: அதனைச் செய்து முடிப்பது சித்தம்; பெருமைப்படுவது அகங்காரம்.

மனிதன் செய்யும் எல்லாச் செயல்களுக்கும் அடிப்படை இந்த நான்கே. இவை சொல்லித்தான் ஐம்புலன்கள் செயல்படுகின்றன.

மனிதனுக்குள்ளே இருக்கிற இந்த நான்கு கோழிகளும் 'இதை அனுபவி; அதை அனுபவி' என்று வழி காட்டுகின்றன. ஐம்புலன்களாகிய குஞ்சுகள் அனுபவிக்கின்றன.

கிழட்டு நரி எது? நோய்தான். கிழட்டு நரி வருவது கோழிக்கும் குஞ்சுக்கும் தெரிவதில்லை. அது வந்தவுடன் ஒன்பதையும் விழுங்கி விடுகிறதே. அது போலத்தான் நோய் வந்தால் மனிதன் ஒன்பது கரணங்களும் அடங்கி விடுகின்றன.

''சாவல் நாலு குஞ்சு அஞ்சு
  தாயதான வாறுபோல்
மாயமான கூட்டுக்குள்
  கலகங்கள் விளைத்தன
சேயதான கிழநரி
  நாவசைத்து வந்ததும்
சாவல் நாலு குஞ்சு அஞ்சு
  தான் இறந்து போனவே!''

இது சிவ வாக்கியர் பாடல்.



# அன்புடன் கொஞ்சம் வம்பு



● கவிஞர் இனிய பாரதி எழுதிய 'விசாரணைகள்' என்ற கவிதை நூலின் வெளியீட்டு விழா மத்திய நூலக சங்கக் கட்டிடத்தில் நடந்தது. தலைமைப் பொறுப்பேற்று நடத்த இருந்த நா. பார்த்தசாரதியை எதிர் பார்த்து எதிர்பார்த்து ஏமாந்தார்கள். மேலும் போஸ்டரில் பேர் போடப்பட்டு வராமல் இருந்தோர் பட்டியல்: கோமல் ஸ்வாமிநாதன், கங்கை அமரன், வலம்புரி ஜான், கவிஞர் இன்குலாப். வந்தவர் குமரி அனந்தன் ஒருவர்தான். கூட்டம் கலையும் போது 'வர முடியாதவர்கள் ஏன் வாக்குறுதி கொடுக்கிறார்கள்' என்று பேசிக் கொண்டே கலைந்தார்கள். **—இல்லப்பா**

● சென்னை நகரத்தின் கல்லூரிகள் சிலவற்றில் மாணவர் யூனியன் பிரத்தியேக 'லெட்டர் பேட்' ஒன்று உண்டாம். இன்ன தியேட்டரில், இன்ன ஷோவுக்கு, இத்தனை டிக்கட் என எழுதி, ஒரு கையெழுத்து வாங்கிக்கொண்டு தியேட்டருக்குப் போய்விட வேண்டியதாம். மானேஜரிடம் காட்டி, டிக்கட் தரும்படி' கட்டாயப்படுத்த வேண்டியதாம். அவர்களும் 'நமக்கு ஏன் வம்பு' என டிக்கட் கொடுத்து விடுகிறார்களாம்.

● ஓவியர் ஆர்யாவின் 'பாரதியார்' படத்தை அனுமதி இன்றிப் பயன்படுத்திய தாய்க் கூறி, இரண்டு தமிழ்ப் பத்திரிகைகள், ஒரு ரெக்கார்டு வெளியீட்டு நிறுவனம், ஒரு கேஸட் வெளியீட்டு நிறுவனம் இவற்றுக்கெல்லாம் ஓவியர் வக்கீல் நோட்டீஸ் அனுப்பிவிட்டாராம். ரெக்கார்டு கேஸட் நிறுவனங்கள் பதினைந்து பெரிய நோட்டுக்கள் கொடுத்துச் சமாதானப்படுத்தி விட்டார்களாம். பத்திரிகைகள் மறுபடி பாரதி படத்தை வெளியிட்டு 'உரிமை ஆர்யாவுக்கு' என விளம்பரம் தரச் சம்மதித்திருக்கின்றனவாம்!

● தென்னார்க்காடு மாவட்டத்தில் ஒரு பெண்கள் பள்ளிக்கூடம். கழிப்பறை வசதி இல்லாததால் பொதுப்பணித் துறைக்கு எழுதிப் போட்டார்கள். கிணற்றில் போட்ட கல் கதைதான். கலெக்டரிடம் விண்ணப்பித்து, உடனடி நடவடிக்கை கோரினார்கள். கலெக்டரும் தம் நிதியிலிருந்து கழிப்பறை கட்டடங்கள் கட்ட உத்தரவிட, வேலை ஆரம்பமாயிற்று. பொ. ப. துறையும் விழித்துக் கொண்டு போட்டிக் கட்டடம் கட்ட ஆரம்பித்து விட்டதாம் பக்கத்திலேயே! **-ஜூலி**

## ஓர் இந்தியக் கனவு

● ஒரு நாடகம் ஓஹோ என்று பிரபலமடைந்துவிட்டால் அடுத்த நாடகம் அதை விடப் பிரமாதமாக அமைந்தாலன்றி ரசிகர்களுக்கு ஏமாற்றமே ஏற்படும். அந்த வகையில் தண்ணீர் தண்ணீருக்குப் பிறகு அரங்கேறும் கோமலின் புதிய நாடகமான ''ஓர் இந்தியக் கனவு'' தடுமாறத்தான் செய்கிறது.

கோமல் காட்சிகளை மேலும் எளிமையாக்கியும் கதாசிரியர் என்றமுறையில் ரசிகர்களிடம் மேடையேறி நேரடியாகப் பேசியும் புதியநாடக உத்திகளைக் கையாளத் தயங்க மாட்டேன் என்று காட்டிக் கொள்கிறார்.



கதை இன்றைய சமுதாயத்தில் நடக்கும் அநீதிகளின் பிரதிபலிப்புத்தான். ஆதிவாசிகளுக்கு உதவப் போனவர்கள் மேலிடத்தில் வெறுப்பைச் சம்பாதித்துக் கொண்டு அவதிப் படுகிறார்கள். ''மேலிடம்'' தர்ம நியாயத்தையும் மக்கள் நலனையும் சுயநலனுக்காகப் பலி கொடுக்கிறது. அதிகாரிகள் அமைச்சர்களின் மிரட்டலுக்கு அஞ்சியோ அல்லது ஆசை காட்டலுக்கு மயங்கியோ அவர்களின் கைப்பாவைகளாகிறார்கள். அமைச்சரை முதல்வர் தட்டிக் கேட்க முடியவில்லை, காரணம் முதல்வரே நேர்மையானவர் அல்ல. இந்தச் சூழலில் ஏழைமை ஒழியும், நேர்மை நிலவும் என்ற இந்தியக் கனவு, கனவாகவே நீடிக்கிறது.

இதையெல்லாம் சிக்கலில்லாத எளிமையான கதையில் அமைத்து சுவாரஸ்யமான வசனங்களால் பிட்டுப் பிட்டு வைக்கிறார் கோமல். வாத்தியார் ராமன், லலிதா, வீராச்சாமி, சந்தானம் முதலியவர்கள் நன்றாக நடித்துள்ளார்கள்.

என்றாலும் கோமல் இம்முறை ஒரு குடும்ப நாடகத்தை நடத்திவிட்டு மறுபடி சமுதாய நோக்குக்குத் திரும்பியிருக்கலாம். அப்போது சமுதாயம் நிமிர்ந்து உட்கார்ந்து அவரை நோக்கி யிருக்கும்.

**- குட்டிகிருஷ்ணன்**

# மின்னலடிக்கும் ஸூப்பர் ரின் வெண்மை...

## ...இதர, டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதையும் மிஞ்சும் வெண்மை.

பார்வைக்கு தப்பவே தப்பாத வெண்மை உங்கள் துணிகளுக்கு—வேலை தவறாத ஸூப்பர் ரின் சலவையின் வெண்மையே தனி.
இதர டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதையும் மிஞ்சுவது ஸூப்பர் ரின் வெண்மை.
காரணம், மிகுந்த வெளுக்கும் சக்தி அடங்கியது ஸூப்பர் ரின்.

**நீங்களே கண்டுகொள்வீர்கள்**

இதை வெளுத்தது வேறுவித டிட்டர்ஜெண்ட் பார்



இதை வெளுத்தது ஸூப்பர் ரின்




அதிக வெளுப்பூட்டும் சக்தி படைத்தது ஸூப்பர் ரின்.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

லின்டாஸ்-RIN.40-2012 TH

# இந்தியா விழாவில் இன்னிசை



⁘ சென்னை விமான நிலையத்தில் ஸ்ரீ சதாசிவம் ஸ்ரீமதி எம்.எஸ். மற்றும் இசைக் குழுவினருக்கு அமைச்சர் வீரப்பனும் சட்டமன்ற பேரவைத் தலைவர் ராஜாராமும் மலர்மாலைகள் அளித்து வழி அனுப்பினர்.

## ஜேம்ஸ் ஏ. ரூபின்

அமெரிக்காவில் இந்திய இசைக்குத் தொண்டாற்றி வருகிறார் ஜேம்ஸ் ஏ. ரூபின் தாம் நிறுவிய பான் ஓரியண்ட் ஆர்ட் ஃபௌண்டேஷன் மூலம்.

சென்னையில் டிசம்பர் இசை விழாக்களின்போதும் திருவையாறு தியாகராஜர் ஆராதனையின்போதும் அநேகமாக ஆண்டு தோறும் காணப்படும் பிரபலமான முகம் ஜேம்ஸ் ஏ. ரூபினுடையது. இவர் பிரிட்டனில் நடக்கும் இந்தியா விழாவின் தொடக்க நாளன்று லண்டனில் ஸ்ரீமதி எம்.எஸ். கச்சேரியைக் கேட்டுவிட்டுத் தமது அனுபவத்தைக் கல்கி வாசகர்களுடன் பகிர்ந்து கொள்கிறார்.

திங்கட்கிழமை மார்ச் 22. இரவு மணி 8:10. இளவரசர் சார்லஸ், பாரதப் பிரதமர் இந்திரா காந்தி, பிரிட்டிஷ் பிரதமர் மார்கரெட் தாச்சர் ஆகியோர் லண்டனில் ராயல் ஃபெஸ்டிவல் ஹாலில் அரச குடும்பத்தினருக்கென்று ஒதுக்கப்பட்ட தனி 'பாக்ஸ்'ஸில் அமர்கிறார்கள்.

மேடையின் இடதுபுறம் பிரும்மாண்டமான ஒரு முரசம் அதிர்கிறது. அதைத் தொடர்ந்து இந்தியக் குடியரசுத் தலைவரின் மெய்க்காப்பாளர்கள் ஜாஜ்வல்யமான உடைகளில் அணிவகுத்து நின்று டிரம்பெட் ஊதுகிறார்கள். பிரிட்டனில் இந்தியா விழா தொடங்கி விட்டது!

⌘ ராயல் பெஸ்டிவல் ஹால் - உட்புற வெளிப்புறத் தோற்றங்கள்.

ஆனால் எனக்கும் சரி, என்னைப் போன்றே மிகுந்த ஆர்வத்துடன் கூடியிருந்த ஆயிரக் கணக்கான ரசிகர்களுக்கும் சரி, டாக்டர் நாராயண மேனனின் வரவேற்புரையும் அறிமுகவுரையும் முடிந்து ஸ்ரீமதி எம். எஸ். இசை எனும் தமது மந்திர சக்தியால் எங்களை ஆட்கொள்ளத் தொடங்கிய போதுதான் விழா ஆரம்பமாயிற்று. தமது வாழ்நாளி லேயே சரித்திரம் படைத்துவிட்ட திருமதி எம். எஸ்., 'ஸ....' என்று சுருதியோடு இழையத் தொடங்கிய அந்தக் கணத்தி லேயே பெருந் திரளாகக் கூடியிருந்த ரசி கர்கள் சிலையாகி விட்டனர். அவையோரின் ஆழ்ந்த நிசப்தத்துடன் கூடிய லயிப்பை மெய்ப்பித்துக் காட்டின, இடையிடையே எழுந்த இடிமுழக்கம் போன்ற கரவொலிகள். மேற்கத்திய ரசிகர்களே பெரும்பாலும் நிரம்பியிருந்த அரங்கில் அனைவரும் மகிழ்ச் சிக் கடலில் திளைப்பதை நன்கு உணர முடிந்தது.

மூன்றே பாடல்கள்தான். தியாகையரின் பண்டு ரீதி (ஹம்ஸ நாதம்) முத்துசுவாமி தீக்ஷிதரின் அக்ஷய லிங்க விபோ (சங்கரா பரணம்) மீரா பஜன் ஹரிதும ஹரோ. தமக்கு ஒதுக்கப்பட்ட நாற்பத்தைந்து நிமி ஷங்களுக்குள் எம். எஸ். கடலனைய கர் நாடக இசையின் ஜீவனை மட்டுமின்றி அதன் ஆன்மீக அழகு, புற அழகு ஆகிய வற்றையும் அதற்கு ஒரு சிறந்த கலைஞர் செய்யக் கூடிய பக்தி சிரத்தையான அலங் காரங்களையும் அனைவரும் உணர்ந்து ரசிக்கச் செய்துவிட்டார் எனில் அதனை அற்புதம் என் பது தவிர வேறு எப்படி வர்ணிக்க முடியும்!

இந்த முக்கால் மணி நேரத்துக்குள் அவர் பக்க வாத்தியக்காரர்கள் தங்கள் ஆற்றலை அதிகப்பட்சமாகக் காட்டவும் இடம் ஒதுக் கித் தந்தார்! தேர்ந்த அனுபவசாலியான அழகிரிசாமி வயலினைக் கையாண்ட வித மானது எம். எஸ்.ஸுக்கு அனுசரணையாக மட்டுமின்றி வயலின் இந்திய இசைக்கு எத்தனை வாகவமாக அமைந்து விட்டிருக் கிறது என்று மேனுட்டினர் வியந்து மகிழும் வண்ணமும் இருந்தது. மிருதங்கம் குரு வாயூர் துரை, கடம் விநாயகராம், கஞ்சிரா ஹரிசங்கர். மூவரும் அடங்கி வாசிக்க வேண் டிய சமயம் அடங்கியும் வெளுத்துக் கட்ட வேண்டிய நேரத்தில் விட்டுக் கொடுக்கா மலும் பிரமாதப்படுத்தி விட்டார்கள். கச்சிதமான தனி ஆவர்த்தனம் முடிந்ததும் அதுவரை பிரமித்துப் போயிருந்த ரசிகர்கள் விண்ணதிரச் செய்தனர்.

ராதா விசுவநாதன் இப்போதெல்லாம் உடன் பாடுவதாக நினைக்கவே தோன்றுவ தில்லை. மேடை ஏறியதும் அவர் குரல் மட்டு மின்றி ஆன்மாவும் கூட எம். எஸ்ஸுடன் இரண்டறக் கலந்து விடுகிறது. ஒன்றிய ஒரே தேனிசையே நம் செவிப் புலன்களை எட்டு கிறது. கண்களை மூடிக்கொண்டு விட்டால் ராதா மேடையில் அமர்ந்திருப்பதையும் பாடு வதையும் யார் அறிவார்கள்?

கடைசியாக ஹரி தும ஹரோ பஜன் முடிந்து எம். எஸ்.ஸின் குரல் செவிகளில் ரீங்காரமிடுவது நின்றதும் ரசிகப் பெருமக்கள் மரியாதை காட்டும் விதமாக எழுந்து நின்று கரகோஷம் செய்தனர். அப்போது எழுந்த கரவொலி குண்டு வெடித்தால் கூட இப்படி ஓசை கேட்குமா என்று எண்ணும்படி அவ் வளவு பெரிதாக இருந்தது என்பது மட்டு மல்ல; அடுத்த நிகழ்ச்சி ஆரம்பமாகு முன் தரப்பட்டிருந்த இடைவேளையின் கணிசமான பகுதியை விழுங்கிவிடும் அள வுக்கு அத்தனை நேரம் நீடித்தது! எம். எஸ். மேடையை விட்டு அகன்ற பின்னரும் ரசி கர்கள் அரங்கை விட்டு வெளியேற மன மின்றிக் கூட்டம் கூட்டமாய் நின்றனர். முன் வரிசையில் அமர்ந்திருந்த திரு சதா சிவத்தைச் சூழ்ந்துகொண்டு தங்கள் வாழ்த் தையும், மகிழ்ச்சியையும் எம். எஸ்.ஸுக் குத் தெரியப்படுத்த வேண்டும் என்று கேட்டுக் கொண்டனர்.

இடைவேளைக்குப் பிறகு இன்னொரு நாற் பத்தைந்து நிமிஷம் பண்டிட் ரவிசங்கரின் ராகமாலா நிகழ்ச்சி. ஸிதாரும் மேற்கத்திய ஆர்க்கெஸ்ட்ராவும் இணைகின்ற இந்த நிகழ்ச்சியை நடத்திக் கொடுத்தவர் இசை இயக்குனர் என்ற முறையில் உலகப் புகழ்


எம்.எஸ்.


✻ ஸுபின் மேத்தா, ரவிசங்கர்

பெற்ற இந்தியர் ஸுபின் மேத்தா, லலித், பைரவி, யமன் கல்யாண், மியான் கி மல்ஹார் ஆகிய ஹிந்துஸ்தானி ராகங்களை ஆர்கெஸ்ட்ரா இசைக்கேற்ப இலேசான சில மாற்றங்களுடன் கேட்கும்போது புதுமையாகவும் புத்துணர்ச்சி ஊட்டுவதாகவும் இழக்கத்திய மேற்கத்திய ரசிகர்களான இரு சாராருக்குமே இருந்தது.

நிகழ்ச்சிகள் முடிந்த பிறகு ஒரு வரவேற்பு உபசாரம். அப்போது ஸ்ரீமதி இந்திரா காந்தி ஆனந்தத்தை அடக்கிக்கொள்ள முடியாமல் ஸ்ரீமதி எம். எஸ்.ஸை அப்படியே கட்டி அணைத்துக் கொண்டுவிட்டார்! ஸ்ரீமதி தாட்சர் புகழுரைகளைக் குவித்தார். இதனிடையில் இளவரசர் சார்லஸை உடனே வந்து சந்திக்க வேண்டும் என்ற கோரிக்கையுடன் எம். எஸ்.ஸைத் தேடி அவசரமாக வந்தார் ஒரு தூதர். "ஒரு அதி அற்புதமான இசை அனுபவத்துக்காக உங்களை நேரில் பார்த்து நன்றி கூறிவிட்டுத் தான் கிளம்புவேன் என்று பிடிவாதமாகக் காத்துக் கொண்டிருக்கிறார்" என்றார் அந்தத் தூதர்! வினாடி நேரமும் தாமதியாமல் எம். எஸ். அவர் இருக்குமிடத்துக்கு விரைய, இளவரசர் மிக நுணுக்கமாகவும், அதே நேரத்தில் தெளிவாகவும் தமது பாராட்டை அளித்தார். எம். எஸ்.ஸின் சுருதி இம்மியளவும் விலகாமலிருந்ததைக் குறிப்பாக இளவரசர் போற்றியதானது அவரது இசைக் காதலை மட்டுமின்றி இசை ஞானத்தையும் உணர்த்தியது.

இந்த இசை நிகழ்ச்சிகளின்போது டேப் செய்யவோ புகைப்படமெடுக்கவோ புகை பிடிக்கவோ யாரும் அனுமதிக்கப்படவில்லை என்பதிலிருந்து இசைக்கு இவர்கள் தரும் மரியாதை புலனாயிற்று. இருமல் வந்தால் கைக்குட்டையைக் கட்டாயம் பயன்படுத்த வேண்டும் என்றுகூட எச்சரித்திருந்தார்கள்!

எம். எஸ்.ஸின் இசை நிகழ்ச்சி நடந்த ராயல் ஃபெஸ்டிவல் ஹால் உண்மையில் ஒரு பிரும்மாண்டமான கலைக் கேந்திரத்தின் பிரதான அரங்கம் மட்டுமே. தேம்ஸ் நதியின் தென் கரையில் அமைந்துள்ள இந்தக் கலைக் கேந்திரத்தில் வேறு பல அரங்குகளும் கலைக் கண்காட்சிக் கூடங்களும் உண்டு. சகல வசதிகளும் கொண்ட மிக நவீனமான இந்த அரங்கில் கலை நிகழ்ச்சிகள் அளித்துள்ள உலகப் புகழ் பெற்ற கலைஞர்கள் பட்டியலில் இன்று எம். எஸ்.ஸின் பெயரும் இடம் பெற்றுள்ளது. அடிக் கோடிட்டு மகிழக் கூடிய முக்கியத்துவம் பெற்ற பெயராகவும் ஆகிவிட்டது.

பிரிட்டனில் எட்டு மாதம் நடக்கப் போகும் இந்த இந்தியா விழாவினை வெற்றிகரமாகச் செய்ய ஏராளமான தனியார் நிறுவனங்கள் மட்டுமின்றித் தனி நபர்களும் பெருவாரியான நன்கொடைகளை வழங்கியிருக்கிறார்கள். இவர்களில் இந்தியரும் உண்டு, பிரிட்டிஷ் பிரஜைகள், நிறுவனங்களும் பல உண்டு.

கலை நிகழ்ச்சிகள் தவிர இந்தியா பற்றிப் பல தலைப்புக்களில் கண் காட்சிகளும் நடக்கின்றன — இந்திய — பிரிட்டிஷ் அரசுகளின் பூரண ஒத்துழைப்பு விழா நிர்வாகிகளுக்குக் கிட்டியுள்ளது. விழாவின் விளைவாக இந்திய - பிரிட்டிஷ் நல்லுறவு வளர்வதுடன் தொழில் வர்த்தகத் தொடர்புகளும் அதிகரித்து இரு நாடுகளிலும் வளம் பெருக வேண்டும்.

எம். எஸ்.ஸின் இசை நிகழ்ச்சி நடப்பதற்கு முன்னமேயே பத்திரிகைகள் இங்கு அவரை அறிமுகப்படுத்தி எழுதின. ஸண்டே டைம்ஸ் என்ற மிக கண்ணியமான பத்திரிகை "இந்தியக் குயில்" என்று தலைப்பிட்டு "மரியாதைக்கும் மதிப்புக்கும் உரிய சுப்புலட்சுமி" என்று அடைமொழிகளோடு வரவேற்றது.

"இரண்டு பிரதமர்கள் ஓர் இளவரசர் ஆகியோர் முன் பாடுவது எனக்குக் கிட்டிய பாக்கியமல்லவா!" என்று எம். எஸ். கச்சேரிக்கு முன் இந்தப் பத்திரிகை நிருபரிடம் கூறியுள்ளார்.

கச்சேரி முடிந்த பின்னரோ எம். எஸ்.ஸின் இசையைக் கேட்க முடிந்தது தங்கள் பாக்கியம் என்று அம்மூவரும் கருதியிருக்கக் கூடும்.

தமிழாக்கம்: குட்டிகிருஷ்ணன்

## ஆன்றோர் வாக்கு

ஒரு தேசத்தினுடைய பண்பு உயர்ந்திருக்கிறது, மனோபாவங்கள் உயர்ந்திருக்கின்றன என்பதைக் காண்பதற்கு, அது எவ்வளவு சுத்தமாக இருக்கிறது என்பதை உரைத்துப் பார்ப்பதற்கு அந்தத் தேசத்திலுள்ள மகா கவி யாரோ அவருடைய வாக்கேதான் ஆதாரம்.

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்

கடவுளிடத்தில் உண்மையான ஜீவன் நிறைந்த பக்தியே சத்தியமாகும். இது இல்லாமல் பிரமசரிய விரதத்தை அனுஷ்டிப்பதென்பது இயலாத காரியமென்றே கருதுகிறேன்.

—மகாத்மா காந்தி

மரணத்தோடு ஓட்டப் பந்தயத்தில் ஈடுபட யாரால் முடியும்?

-ஜான்ஸன்

கபடமின்மைக்கும் அழகுக்கும் விரோதி காலம் ஒன்றே.

—சட்ஸ்

வெற்றிக்கு அனைத்தும் தலைவணங்கும்; ஏன் இலக்கணம் கூடத்தான்!

—விக்டர் ஹியூகோ

# "மாறுவீர் நியூட்ரமுல் வீரராய்" மா மல்லர் தாராசிங் கூறுகிறார்.

திடவுடல் அமைத்திட
தித்திக்க ஒரு சொல்,
தீரர்தாரா வாயால்:
நியூட்ரமுல். அமுல்
படைப்பு. அத்தனையும்
சத்து: அமுல் ஆடைப்
பால். அருமையான
மால்ட். இன்றியமையாப்
புரதம். இன்னமுதக்
கோக்கோ.
வைட்டமின்கள். உலோக
தாதுக்கள். ஓகோ சுவை
விருந்து! விலையோ மிக
மலிவு—போர்ன்விடா
பூஸ்ட், மால்டோவா
எதனையும் விட!






விற்பமுதல் விடுப்போர்:
குஜராத் கோ-ஆபரேட்டிவ் மில்க
மார்க்கெட்டிங் ஃபெட. லிட.,
ஆனந்த்-388 001

# Only for those who like to be sure




The VIP label. Your guarantee of comfort and confidence. Confidence that your anatomy demands from scientifically designed underwear.

Made from the choicest fabric. With the softness, the smoothness... and the feel that gives the VIP feeling.



Durable underwear from VIP. A complete price range... because every person is important.




CASHH-1-203

Distributors for the State of Tamil Nadu

**Modern Distributors, 21, Balfour Road, Kilpauk (Near Kellys), Madras-600010**

# எம்.எல்.ஏ. ஹாஸ்டல்

**எம்.எல்.ஏ.க்கள் சட்ட சபையில் அநாகரிகமாய் நடந்து கொள்வது பத்திரிகைகளில் வருகிறது. ஹாஸ்டலில் என்ன நடக்கிறது பார்ப்போமே!**

ஆறு அடுக்கு மாடிக் கட்டிடம் வாசலில் குறைந்தது பத்து அல்லது பதினைந்து போலீஸ்காரர்கள். ஆனால் அங்கு நடக்கும் எந்தக் காரியத்தையும் இவர்கள் கண்டு கொள்வதில்லை. எப்போதும் இங்கு ஜே ஜே என்று கூட்டம் தான். பார்வையாளர்களின் நேரத்தை வரையறுத்து வாசலில் போர்டு இருப்பினும் எந்த நேரத்திலும் கூட்டம் வந்து கொண்டுதான் இருக்கிறது. வாகனங்கள் நிறுத்தப்படக் கூடாத இடத்தில் தான் நிற்கின்றன.

எம். எல். ஏ. ஹாஸ்டலின் கட்டுப்பாடுகள், விதிகள் பற்றிக் கேட்க அதிலுள்ள அலுவலகத்துக்குச் சென்றபோது அங்கு இருந்தவர் வியப்புடன் உலகின் எட்டாவது அதிசயம் போல என்னை ஏற இறங்கப் பார்த்து, ''அதெல்லாம் இங்கு இல்லை. வேண்டுமானால் கோட்டையில் கேளுங்கள்'' என்று கூறி ரேடியோ கேட்கச் சென்று விட்டார்.

அறைகளில் உறுப்பினர்களின் நண்பர்களும், அவர்களது குடும்பத்தினரும் தாராளமான எண்ணிக்கையில் இருந்தார்கள். காற்றோட்டம் இல்லாத அறைகளுள் எட்டிப் பார்த்தால் வெள்ளை அடிக்கப்படாத ''கறை'' படிந்த சுவர்கள் காணப்படுகின்றன. பல அறைகளில் சுவரில் எம். ஜி. ஆர்., உதய சூரியன் படங்கள் வரையப்பட்டு உள்ளன. சில அறைகளை யொட்டிய பாத்ரூமில் நுழையவே குமட்டுகிறது.

சில உறுப்பினர்களின் பாத் ரூம் அறைகளில் ரசமும், சாம்பார் சாதமும், ஊற்றெடுத்துக் கிடந்தன. விசாரித்ததில் குழாய்களுக்கும் சாக்கடைகளுக்கும் சரியான இணைப்பு இல்லாததால் மாடி அறையில் கழுவப்பட்ட பண்டங்கள் கீழறைகளுக்குள் பிரவேசிக்கின்றனவாம்.

இங்கிருந்து போனில் தொடர்பு கொள்வது பகீரதப் பிரயத்தனமாய் உள்ளது. தப்பித் தவறித் தொடர்பு கிடைத்தாலும் யாராவது ஒட்டுக் கேட்கிறார்களோ என்ற பயம் பல எம். எல். ஏ.க்களுக்கு இருக்கிறது.

பெரம்பலூர் சட்ட மன்றத் தொகுதி (திருச்சி மாவட்டம்) தி. மு. க. உறுப்பினர் திரு ஜே. எஸ். இராசுவிடம் பேசியபோது அவர், ''எம். எல். ஏ. ஹாஸ்டலில் நன்றாக பாட்டில் வியாபாரம் நடக்கிறது. ஒரு முறை நானும் இ. காங்கிரஸ் உறுப்பினர் சித்தனும் லிஃப்டில் வரும்போது ஒருவர் அசடு வழிந்தவாறு இடுப்பில் இருந்த பாட்டிலை எடுத்துக் காண்பித்து, 'இது சகஜம், கண்டுக்காதீங்க' என்றார். மேலும் கட்டுக்கடங்காத கூட்டம் இருப்பதால் படிப்பது, சிந்திப்பது, மறுநாள் சட்ட மன்றத்துக்குத் தேவையான பேச்சைத் தயார் செய்வது எதுவும் முடியவில்லை'' என்று குறிப்பிட்டார்.

காவேரிப்பட்டினம் அ. தி. மு. க. சட்ட மன்ற உறுப்பினர் டாக்டர் சமரசம் அவர்களிடம் பேசியபோது ''இங்கு மதுவோ, மாதுவோ இல்லவே இல்லை. சாப்பாடுதான் பெரிய பிரச்னை. எம். எல். ஏ.க்கள் என்ப



✖ திரு. ஜே. எஸ். இராசு (தி.மு.க.)



✖ திரு. சமரசம் (அ.தி.மு.க.)



தால் எங்களுக்கு நல்ல சாப்பாடு. ஆனால் எங்களைக் காண வருபவர்களுக்கு சாப்பாடு சரியாக இல்லை. இங்கு ஒருவர் ஒரு வாரம் சேர்ந்தாற்போல் சாப்பிட்டால் டாக்டர் பில் நிச்சயம். நம் தொகுதி மக்கள், நம்மைக் காண வந்து, இங்கேயே தங்க நினைக்கும் போது போகச் சொல்ல மனம் வருவதில்லை. ஏதாவது சொன்னால் நாம் வோட்டு போட்டு வந்தவனுக்கு எவ்வளவு திமிர் பார்த்தியா என்று பேச ஆரம்பித்து விடுவார்கள். பல மாணவர்கள் இங்கு பரீட்சைக்குத் தங்கியும் படிக்கிறார்கள்'' என்றார். திரு சமரசம் திரைப்படம் தயாரித்து வருகிறார். தாமே கதாநாயகனாகவும் நடிக்கிறார்.

சில பேரிடம் பேசிவிட்டு வருகையில் நான் ஏதோ டிரான்ஸ்ஃபருக்காக எம். எல். ஏ. ஹாஸ்டலுக்கு வந்ததாக நினைத்து இரண்டு புரோக்கர்கள் என்னை அணுகினார்கள்.

ஒரு எம். எல். ஏ. அறையில் இருக்கிறாரா இல்லையா என்று தகவல் அறிய வரவேற்பில் கேட்டால், ''எந்த எம். எல். ஏ. தகவல் சொல்லிவிட்டுப் போகிறார்?'' என்று பதில் கேள்வி பிறந்தது.

எம்.எல்.ஏ.க்களைக் கேட்டாலோ ''வாசற் கதவுகளில் IN out, என்ற போர்டு அரசு செய்துதரக்கூடாதா?''என்கிறார்கள்.மேலும் ஒவ்வொரு அறை வாசலிலும் தமக்கு வரும் கடிதத்தைத் தபால்காரர் போட்டுச் செல்ல ஒரு தபால் பெட்டி தேவை என்றும் சொல் கிறார்கள்.

எம். எல். ஏக்களிடம்தான் நம் குறை களைக் கூற வேண்டும் என்று நாம் எண்ணி வந்தது போக எம். எல். ஏ.க்களே தங்கள் குறைகளை நம்மிடம் சொல்கிறார்கள்!

—''சிக்கி'' படம்: உத்ரா





**சிலோன் நிகழ்ச்சிகளைச் சென்னை நேயர்கள் நன்கு பார்க்க என்ன செய்யலாம்? ஹனீபா சொல்கிறார்:**

- சிலோன் டெலிவிஷன் நிகழ்ச்சிகள் பாண்ட் 3—சானல் 5 மற்றும் 8ல் பார்க்கலாம்.
- மல்டி சானல் வசதி கொண்ட டீ. வி.க்களில்தான் சிலோன் டீ. வி. நிகழ்ச்சிகளைப் பார்க்க முடியும். 'சிங்கிள் சானல்' டீ. வி.க்களைச் சுமார் இருநூறு ரூபாய் செலவு செய்து மல்டி சானல் டீ.வி.யாக மாற்றிக்கொள்ள முடியும்.
- ஸ்ரீலங்கா சென்னைக்கு நேர்தெற்காக இருப்பினும், டீ.வி. ஆண்டனாவைத் தென் கிழக்குத் திசையில் திருப்பினால்தான் நிகழ்ச்சிகள் தெரியும். இதனால் சென்னை டீ. வி. நிகழ்ச்சிகள் தெளிவாய்த் தெரியாவிட்டால், இக்குறையை ஃபைன் டியூனிங் குமிழைத் திருகிச் சரிசெய்துவிடலாம்.
- 3 எலிமெண்ட் (குறுக்குக் கம்பி)கள் கொண்ட தற்போதைய ஆண்டனா வுக்குப் பதிலாக 13 அல்லது 18 எலிமெண்ட்கள் கொண்ட ஆண்டெனாவைப் பொருத்துவதன் மூலம் சிலோன் நிகழ்ச்சிகளை நன்கு பார்க்கலாம். செலவு சுமார் முந்நூறு ரூபாய் ஆகும்.
- இன்னும் தெளிவாய்த் தெரிய வேண்டுமெனில் பூஸ்டர் உபயோகிக்கலாம். மின்சாரத்தில் இயங்கும் சிறு பெட்டி போன்ற இந்தக் கருவி சுமார் நானூறு ரூபாய் ஆகிறது. இதை ஆண்டெனாவின் செங்குத்தான கம்பியில் பொருத்த வேண் டும். இது மிகக் குறைந்த அளவில் கிடைக்கும் சிக்னல்களைக் கூடப் பலமடங்கு பெருக்கி டீ. வி.க்கு அனுப்பும் திறன் கொண்டது.
- இவ்வளவு செய்தாலும் கூட எல்லாநாட்களிலும்,ஒளிபரப்பப்படும் அத்தனை நிகழ்ச்சிகளையும் தெளிவாகப் பார்க்க முடியும் என உறுதியாய்ச் சொல்ல முடியாது. ஒளிபரப்பு சிக்னல்கள் வானிலையைப் பொருத்திருப்பதே காரணம்.

—எஸ். சந்திரமௌளி

# புத்துணர்ச்சிதரும் தூய சுவாசம்...
# உறுதிமிக்க, ஆரோக்கியமான பற்கள்



## அளித்திடுதே கோல்கேட் டென்டல் க்ரீம்

ஒவ்வொரு சாப்பாட்டிற்குப் பிறகும் கோல்கேட் கொண்டு உங்கள் பற்களைப் பிரஷ் செய்யுங்கள். உலகெங்கும் பல டாக்டர்கள் சிபாரிசு செய்வதைப் போலவே அது உங்களைப் பாதுகாக்கிறது.

உங்கள் பற்களுக்கிடையே தங்கியுள்ள உணவுத் துணுக்குகளில் பாக்டீரியாக்கள் வளர்கின்றன. இவை வாய் துர்நாற்றத்தையும், பிறகு வலிமிக்க பற்சிதைவையும் உண்டாக்கும்.

எனவே சாப்பிட்டு முடித்தவுடனேயே கோல்கேட் முறையில் பற்களைப் பிரஷ் செய்யுங்கள். அது புத்துணர்ச்சியுடன் இனிய சுவாசத்தைத் தருவதற்கும், பற்களுக்கு வெண்மையளிப்பதற்கும், பற்சிதைவை எதிர்ப்பதற்கும் மிகவும் சக்தி வாய்ந்தது என்று நிரூபணமாகியுள்ளது.

**கோல்கேட்டின் புத்துணர்ச்சி தரும், பெப்பர்மின்ட் சுவை பல்துலக்குவதை ஒரு இன்ப அனுபவமாக்குகிறது.**

நம்பகமான, கோல்கேட்டின் செயல் புரியும் முறை



உணவுத் துணுக்குகள் பற்களுக்கிடையே சிக்கிக் கொள்வதால் துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் உண்டாக்கும் பாக்டீரியாக்கள் வளருகின்றன.



கோல்கேட்டின் ஒப்பற்ற, செயல்புரியும் நுரை ஆழ ஊடுருவிச் சென்று உபாதை தரும் உணவுத் துணுக்குகளையும் பாக்டீரியாக்களையும் அகற்றி விடுகிறது.



பயன்: கவர்ச்சிமிக்க வெண்மையான பற்கள், தன்னம்பிக்கை தரும் இனிய சுவாசம், பற்சிதைவுக்கெதிராகப் பாதுகாப்பு.

**கோல்கேட் டென்டல் க்ரீம் உபயோகித்து வாய்துர்நாற்றத்தைத் தடுத்திடுங்கள் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்**




DC-G-74 TM

**"உங்க ஸ்நேகிதம் சதா என்னை ஆச்சர்யப்பட வைக்கிற விஷயமாயிப் போயிடுச்சு இளங்கோ" என்றான். ஆனால் அதற்கு உள் அர்த்தத்தை வேறு சிலர் கற்பிக்க முயன்ற போது...**

---

ஒரு வருஷத்துக்கு முன் வந்த ஒரு புதன் மாலையில்....

''நீங்க.... சரஸ்வதி.... இல்லையா?''

கதவு தட்டப்பட்டவுடன் திறந்ததில் இவள் பேசத் தயாராக வைத்த வார்த்தைகள் மறந்து போக மவுனமாய்த் தலையாட்டினாள்.

''ப்ளீஸ் கம் இன் மிஸ் சரஸ்வதி'' என்றான் இளங்கோ.

சற்று மிரட்சியுடன் இளங்கோவின் அறைக்குள் நுழைந்து தயக்கமாய் உட்கார்ந்து சுவரில் அங்கங்கு தெரிந்த அவன் கைவண்ணங்களைப் பார்க்க ஆரம்பித்த பொழுது... சின்ன டிரேயில் பிஸ்கட்டுகளுடன் வந்தான் உள்ளிருந்து.

''லெட்டர்ல எழுதினபடியே நீங்கள் வந்ததில சந்தோஷம். வார இதழ்கள்ல வர்ர இல்லஸ்டிரேஷனை இத்தனை உன்னிப்பா கவனிச்சு ரசிச்சுக் கடிதாக போட்டுப் பாராட்டறவங்க ரொம்பக் குறைவு. நீங்க அதில ஒருத்தர்ங்கறப்ப மகிழ்ச்சியா இருக்குங்க சரஸ்வதி.''

முதல் தடவையாய்ப் புன்னகைத்தாள் சரஸ்வதி. அவன் இதமாய், கனிவாய்ப் பேசப் பேச, அவளின் தயக்கமும் அந்நியக் கூச்சமும் விலகிப் போயின. பேச ஆரம்பித்தாள்.

இளங்கோவின் ஆல்பத்தைப் பற்றி, பின் வடநாட்டு மிலான், மாரியோ பற்றி அவளுக்குப் பிடித்த அபிமான ஜி. கே. மூர்த்தி ம. செ. பற்றிப் பேசப் பேச அவளுக்கு ஓவியத்தில் இத்தனை ஈடுபாடும் ஞானமும் இருக்கும் என்று இவன் கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை. பிக்காஸோவின் க்யூபிசம், பின், சர்ர்யலிஸம் பற்றிப் பேசினதும் பிரமித்தே போனான் இளங்கோ.

விடைபெற்றுக் கொண்டு கிளம்பும்போது,

''இளங்கோ.... இன்னிக்கு இப்படியெல்லாம் கழியும்னு நினைக்கவே இல்லை. என்னைப் பார்த்ததுமே என்னோட 'இதை'ப் பார்த்து அதிர்ந்து போயிடுவீங்க, சரியா பேச மாட்டீங்கன்னுதான் நினைச்சிருந்தேன். இதுவரைக்குமே அப்படித்தான். என்னை ஒதுக்கிறவங்கதான் அதிகம். ஆனா நீங்க ரொம்பவும் வித்தியாசமாய்... வித்தியாசமாய்....''

உணர்ச்சியால் அவள் குரல் தழுதழுத்துப் போக....

இளங்கோ மென்மையாகப் புன்னகைத்தான்.

''மிஸ் சரஸ்வதி, நான் மனசையும் ரசனையையும் மட்டுமே பார்க்கிறவன். மற்றதை அல்ல. ஓவியத்தில் ஞானமுள்ள நிஜ ரசனையுள்ள ஒரு பெண்ணைச் சந்திச்ச இந்த நாளை உன்னால மறக்க முடியாது. போய்ட்டு வாங்க. நேரம் கிடைக்கிறப்பவெல்லாம் நீங்க கண்டிப்பா வரணும்.;... சரியா?''

வெளியில் சூரிய அஸ்தமனத்துக்குச் சாட்சியாய் நின்ற மேகங்கள் 'லூகடெர்மா'வின் கோர பாதிப்புள்ள சரஸ்வதிக்கும், ஓவியன் இளங்கோவுக்குமிடையே இனிய நட்பு ரோஜா மலர்ந்ததை ஆச்சர்யமாய்ப் பார்த்தன.

''என்ன ஒரேயடியாக் கற்பனை? கதை எழுதப் போறீங்களா?''

ப்ளாஷ் பேக் நினைவுகளினின்று விடுபட்டுப் புன்னகைத்தான் இளங்கோ.

''கதாசிரியர்களுக்குத்தான் கற்பனைன்னு இல்லே சரசு. கலைஞர்களே கற்பனாவாதிகள் தான். ஆனா இப்பக் கற்பனை இல்லை. நம்ம முதல் சந்திப்போட நினைப்பு வந்துச்சு.''

''ஹா! என் வாழ்க்கையிலேயே அன்னைக்கு மாதிரி நான் சந்தோஷமா இருந்ததில்லே... இளங்கோ.''

கண் மூடி – அந்த நாள் இனிமைகளின் சுகத்தை அனுபவிப்பவள் போல் சற்று மௌனமாய் இருந்தாள் சரஸ்வதி.

''இளங்கோ... உங்க கூடப் பேசிட்டு இருக்கிற சமயங்கள்லதான் எனக்கு இந்த வியாதி பிடிச்சிருக்குங்கிறதையே மறந்து போயிடறேன் தெரியுமா? மற்ற நேரங்கள்ல இது முள்ளாய் உறுத்திக்கிட்டே இருக்கு இளங்கோ! ஆமா, எனக்குக் கிடைக்கிற சலுகைகளும், அனுதாபங்களும் இதை எனக்கு நினைவுபடுத்திக்கிட்டே இருக்கு...''

''ஓ.கே....ம்மா... லீவ் இட்....''

எழுந்து போய் ப்ளாஸ்கில் இருந்த டீயை டம்ளர்களில் ஊற்றி எடுத்து வந்தான் இளங்கோ.

''சரசு... அதை மறந்துடேன். எப்பவும் அதைப் பத்தியே பேசறதை விட்டுடணும் இனி நீ.''

ஆவி பறக்கும் டீயையே வெறித்தாள் சரஸ்வதி.

''இல்லே, இளங்கோ. இப்படி உங்ககிட்டச் சொல்றதிலே இனம் புரியாத ஆறுதல். முதல்ல இது ஆரம்பிச்சப்ப சாதாரணம்தான், போயிடும்னு நெனைச்சேன். கொஞ்சம் பயம். நிறைய நம்பிக்கைகள். பின் போகப் போக நிறைய பயமாய், கொஞ்ச நம்பிக்கைகளாகி... இப்ப....? இரண்டுமே இல்லை. மனசில

கார்த்திகா ராஜ்குமார்

இந்தக் கசப்பும் விரக்தியும் பரவி... பழகிப் போயிடுச்சு.''

''என்னால அப்பா நாத்திகவாதியாயிட்டார், ஆனா அம்மா இன்னும் பக்தியா யிட்டா, எனக்கும் 'இது'னாலே ஒரு வசதி தான். எதுக்குமே பயமில்லே இளங்கோ. பசங்க எவனும் டீஸ் பண்றதில்லே. கலாட்டா பண்றதில்ல. பார்த்தாலே பயந்துக்கறான்களே. அப்புறம் எப்படி?... இந்த மாதிரிக் கொடுமை என் எதிரிக்குக் கூட வரக் கூடாது இளங்கோ....''

''ஹோ!....ஸ்டாப் இட் சரசு.''

இளங்கோ சிறு கோபமாய்ச் சொல்லச் சரசு சடாரென்று நிமிர, சற்றுத் தடுமாறிப் போய்...

''டீ ஆறுதும்மா. முதல்ல குடியேன்'' என்றான்.

குடித்துவிட்டுப் பழைய விஷயத்தை உதிர்த்துவிட்ட மாதிரிப் புன்னகைத்தாள் சரஸ்வதி.

''உங்க கல்யாணி எப்படி இருக்கா?''

''பிரமாதமா..''

''இங்கே வந்தான்னா எனக்கு அறிமுகப் படுத்தி வைக்கிறீங்களா?''

''நிச்சயமா.''

''என்ன சொல்லி அறிமுகப்படுத்துவீங்களாம்?''

''ஓவியத்தைப் பற்றி நிறைய ஞானமுள்ள நல்ல ரசிகை. ப்ரிய சிநேகிதி. உன்னே அடிக்கடி நினைவுபடுத்தும் ஜீவன்னு.''

கலகலவென்று சிரித்தவள், பின் திடீரென்று சீரியஸாகி.... ''வேணும் இளங்கோ என்னைப் பார்த்ததும் உங்க கல்யாணி சரியாப் பேசலேன்னா என்னால தாங்க முடியாது.'' என்றாள் தலை குனிந்தபடி.

இளங்கோவுக்குத் திகைப்பாயிருந்தது.

வாரத்துக்கு ஒரு முறையாவது போனில் கூப்பிட்டு, 'இந்த வாரம் 'விகடன்ல பிரபாகர் கதைக்கு உங்க படம் அவ்வளவு சரியில்லே இளங்கோ' இப்படி எதையாவது பேசும் சரசு, இல்லே நேரிலேயே அறைக்கு வந்து காத்திருக்கும் சரசு, மூன்று வாரத்துக்கு மேலாகியும் போன் செய்யாமல், நேரிலும் வராமல் இருந்ததில் ஆச்சரியமாகிப் போனான்.

என்ன ஆயிற்று என்று புரியாத நிலையில் அவள் வீட்டுக்காவது போய்ப் பார்க்கலாமா என்று யோசித்துக் குழம்பிக் கொண்டிருக்கையில் அன்று வழியில் தற்செயலாய் சரசு எதிர்ப்பட்டாள். வழக்கமான சரசு இல்லே. என்னவோ போலிருந்த வெகு வித்தியாசமான சரசு.

''சரசு என்ன ஆச்சும்மா? ஏன் போன் கூடப் பண்ணலே? போஸ்ட் ஆபீஸ்...னு ஒரு இடம் இருக்கு. அங்கே கார்ட், கவர் இன்ன பிற தபால் சமாசாரங்கள் கிடைக்கும், விஷயங்களைச் சொல்ல, அனுப்ப. அதை மறந்துட்டயா?''

சரசு போலியாய்ப் புன்னகைக்க முயன்றாள்; தடுமாறினாள்.



''அ....அதெல்லாம் ஒண்ணுமில்லேங்க. எனக்கென்ன நல்லாத்தான் இருக்கேன். கல்யாணி கிட்ட இருந்து லெட்டர் வந்துச்சா?''

அவள் குரலின் அந்நியம் புரிந்தது. மறுபடியும் திகைத்துப் போனான்.

வானம் மிக இருண்டு பெருமழை பெய்வேன் என்றிருந்தது. அவசரத் துளிகள் அங்கும் இங்குமாய் விழ ஆரம்பித்தன.

''சரசு... ப்ளீஸ் வாயேன் என் கூட. மறுக்காம.''

ஹோட்டலுக்குள் நுழைந்து காப்பிக்கு ஆர்டர் கூறி விட்டு,

''லுக் சரசு... நான் ஒரு நல்ல சிநேகிதனாத்தான் இதுவரை உன்கிட்ட நடந்து வர்றதா நினைச்சுக்கிட்டு இருக்கேன். எந்தப் பிரச்னையுமே நாம நமக்குள்ள மறைச்சு வச்சதில்லே. இப்ப ஏன் இப்படிப் போலித்தனமா இருக்கே? மனசுக்கு வேதனையாஇருக்கு.''

'நல்லாத்தான் இருக்கேன்!'

''ஹு! எவ்வளவு பெரிய பொய்? இது பேபிலிரும் சரசு. தைரியமாய் நீ பேசேன்.''

இளங்கோ தன் குரலில் உணர்ச்சிகளைத் தேக்கி கேட்க அவன் கேள்விகளில் உடைந்து போனாள் சரசு. உதட்டைக் கடித்து, விம்மல்களை அடக்கப் பிரயத்தனப்பட்டுத் தோற்றாள். கண்ணீர்த் துளிகள் அவசரப் பட்டன. முகம் சிவந்துபோக, தலை கவிழ்த்துக் கொண்டாள்.

அவள் அழும் வேகம் தணியக் காத்திருந்தான் இளங்கோ.

''போதும்மா. இப்ப என்ன ஆயிடுச்சு? இந்தா தண்ணி. குடி. அப்புறம் சொல்லு.''

சரசு தண்ணீர் குடித்துக் கர்சீப்பில் முகத்தை அழுந்தத் துடைத்தாள்.

''இளங்கோ, மூணு வாரத்துக்கு முன்னுலே லைப்ரரியில ஒரு புத்தகத்தைத் தேடிட்டு இருந்தேன். அப்ப புத்தக அலமாரிக்கு அந்தப் பக்கமா என் தோழிகள் இரண்டு பேர் பேசிக் கிட்டு இருந்தாங்க....

'இந்த சரசு இருக்காளே... இதுக்கு ஆர்ட்டிஸ்ட் இளங்கோ சிநேகிதனும். நிஜம்மா ராது?'

'ம்ம்.... யார் கண்டா? அவதான் அப்படிச் சொல்லிக்கிறு. நானும் நாலைஞ்சு பேர்கிட்டக் கேட்டுப் பார்த்தேன். அப்படித் தெரியலே.'

'இவதான் மாடர்ன் ஆர்ட் அது இதுன்னு சொல்லுவாளே, அதைப் பத்தி இளங்கோ கிட்ட ஏதாச்சும் பெனுத்தி யிருப்பா. அவனும் ஏதோ ஆர்ட் பத்திப் பேசறுளேன்னு பதிலுக்குக் கொஞ்சம் பேசியிருக்கலாம்... ஏன்னு யாருக்குமே அவங்களோட சப்ஜெக்டைப் பேசினு கொஞ்சம் இன்ட்ரஸ்டாத் தான் பேசுவாங்க. இல்லையா? பேசிட்டா சிநேகிதன் ஆயிரும்மா?'

'இல்லே ராது. பல தடவை இரண்டு பேரும் பேசிட்டுப் போறதை என் தம்பி பார்த்தானுமே.'

'க்கும்! ஒருவேளை இவளோட 'இது'வுக்காகப் பரிதாபப்பட்டுக்கூட இளங்கோ பேசி இருக்கலாமில்லையா?'

''இளங்கோ... இதைக் கேட்ட அன்னைக்கு ராத்திரி முழுதும் அழுதேன். என்னுல தூங்க முடியல. மனசு முழுக்க நான் கேட்ட வார்த்தைகள் அத்தனையும் ஊசியாகக் குத்தி என்னுலே அந்த வேதனையைச் சகிச்சுக்க முடியல.

''நாம பழக ஆரம்பிச்சு இத்தனை நாட்கள்ல உங்க நிழல்கூட என் மேல படாததை—உங்களோட கண்ணியமா நினைச்சுட்டு இருந்ததெல்லாம் திமர்னு மாறிப்போய் மனசிலே வேறே நச்சு எண்ணம்.

''ஒருவேளை அவங்க சொன்னது உண்மையா இருக்குமோன்னு தோண ஆரம்பிடுச்சு.

''இது தப்பு, மடத்தனம்னு உறைச்சாலுமே விவஸ்தை இல்லாம மனசில மீண்டும் மீண்டும் இப்படியே நினைப்பு இளங்கோ.

''என்னை அன்பாப் பேசி, கண்ணியமா நடத்தின இனிய சிநேகிதன் 'இளங்கோ' மனசிலிருந்து மங்கிப் போக ஆரம்பிக்க, இவங்க சொன்ன புதிய 'இளங்கோ' என்னில உருத்தத் தொடங்கினதும்... உங்களைப் பார்க்கவோ, இல்லே போன்ல பேசவோ என்னுல முடியல. இந்த மூணு வாரமும் சொல்ல முடியாத வேதனைக் குமைச்சல்... தெரியுமா?''

கண்களில் கண்ணீர் முத்துக்கள் அரும்பிப் பளபளக்கத் தன்னையே பார்த்த சரசுவையே கனிவாய்ப் பார்த்தான் இளங்கோ. பின் நாற்காலியைச் சற்றே நகர்த்தி, அவளை நெருங்கி அவளின் நெற்றியில் சிநேகமாய் முத்தமிட்டான்.

''புரியுதா சரசு? புரிஞ்சுக்கம்மா.''

மழை கொட்டிக் கொண்டிருந்ததில் ஜன்னல் வழி தெரிந்த அழுக்கும், தூசியும் படிந்திருந்த ஒரு சின்னச் சிலை சுத்தமாகிக் கொண்டிருந்தது மட்டுமல்ல, தெளிவாய், சுத்தமாய் ஆனது. சந்தோஷக் கண்ணீரில் சரசுவின் மனசும்...

---

கன்யா பரமேசுவரி தேவஸ்தானம் சொத்து வரி, லைசன்ஸ் பணம் செலுத்துவதோடு குப்பை கூளங்களை அகற்றுவதற்கென்றே நகரசபைக்கு வருஷம் 1,50,000 கட்டணம் செலுத்துகிறது! காரணம் இது இருப்பது கொத்தவால்சாவடி பகுதி.

260 வருஷங்களுக்கு மேற்பட்ட இந்தப்புராதன ஆலயத்துக்கு அந்த நாளில் கிழக்கிந்தியக் கம்பெனி ஓர் அரிய பல்லக்கை வழங்கியிருக்கிறது. இந்த ஆலய மகா கும்பாபிஷேகம் அண்மையில் விமரிசையாக நடந்தது.



# நாலுபேர் - ஒரு கதை!

ஜெய்



போகிற போக்கைப் பார்த்தால் தொடர் கதை என்ன, சிறுகதையை எழுதக் கூட நான்கைந்து எழுத்தாளர்களின் கூட்டு முயற்சி தேவைப்படும் போலிருக்கிறது. இதோ ஒரு கற்பனை:

**ஆரம்பிப்பது சிவசங்கரி**

அப்பா!... என்ன வெய்யில். இந்த வெய்யிலில் மாட்னி ஷோவுக்கு ஆலாய்ப் பறந்து ஐஸாய் உருகிக் க்யூவில் எல்லாவற்றையும் மறந்து சினிமாவே கதியாய், அதே உசிராய் நிற்கிறார்களே... ஷ்யாமும் க்யூவில் நிற்கிறான். அவன் தனி மரம். லக்கி கை. பாங்க் ஆபீசர். இன்னும் ஒரு காதலி கூடக் கிடைக்கவில்லே. ஸோ வாட்? ஹி ஈஸ் ஹாப்பி... ஒரு சிகரெட், வெற்றிலே, பொடி, சூயிங்கம் கூட... ம்ஹூம்... தரோ ஜெண்டில்மேன். அவனைக் காதலிக்க இந்த, பரந்த விரிந்த தட்டையான நீண்ட பூமியில் யாரும் இல்லே. இல்லாவிட்டால் சினிமாவுக்கு இப்படித் தனியாக வெட்ட வெளியில் மிதக்கும் ஒரே பட்டமாக வரணும்னு என்ன தலையெழுத்து? ஆங்!... இதோ வருகிறாளே ஒருத்தி..... அவனைத் தேடித்தான் வருகிறாள். டீசன்டானவள்...அவளும்லோன்லி போர்ட்தான். போ டெரக் மாதிரியே அச்சில் வார்த்த பதுமையாய்... ''மிஸ்டர்!''

**தொடர்வது சுஜாதா:**

''மிஸ்டர்!'' கூப்பிடுவது தன்னைத்தானா? ஒரு கணம் யோசித்து விட்டு ஸ்ரீரங்கம் ரதம் மாதிரி திரும்பி அவளைப் பார்த்தான் ஷ்யாம். அய்யங்கார் மாதிரியும் இருந்தாள். பெங்காலி ஜாடையும் இருந்தது. லிப்ஸ்டிக் ரெட் சின்னதாக அவனை வதைத்தது. ''மிஸ்டர், ஒரு எக்ஸ்ட்ரா டிக்கட் எடுக்கறேளா? எனக்காக வேண்டி.....'' அவள் குனிந்து பர்சைத் துழாவியபோது வெளிப்பட்ட இரகண விளிம்புகள் வயிற்றில் ஒசிபிசா செய்தன. அவள் கொடுத்த பணத்தைப் பெற்றுக் கொண்டதும், அவள் சொன்ன 'தாங்க்ஸ்!' ஆனையாம்பட்டியின் ஜலதரங்கமாக ஹிஹுஹிஹு வென்று எட்டு ஆவர்த்தத்தை அவன் ரத்த நாளங்களில் பாய்ச்சியது. 'மயிலாப்பூரைச் சேர்ந்த ஷ்யாமுக்கு இந்த வாரம் திமர்க் காதலாம்!' இதயத்தில் ஜோசியம் எழுதியிருப்பார்களோ!



ஜெ...



**இந்துமதி எழுதுகிறார்:**

''மிஸ்டர், கார்னர் சீட்டாகவே எடுங்க, உங்க டிக்கட்டையும் சேர்த்து!'' என்று அவன் சொல்லிவிட்டு ஒரு 'பொக்கே' நகர்வது போல மெதுவாக, இதமாக நகர்ந்து, நழுவி, பெரிதாக ரஜினி கையை நீட்டி நிற்கும் பேனருக்கு அருகில் நின்றுகொண்டாள். இவனுடன் சேர்ந்து படம் பார்க்கும் போது ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்று உள் மனம் கெகிகத்தாலும் இவனைத் தொடாமல் கொஞ்சமாவது எமோஷன்லே இல்லாமல், அவன் அருகில் இன்டிமேட் மணக்கும்போது, ஒரு பெண், அதுவும் இளமையானவள் இவள் என்ற சிலிர்ப்பு இல்லாமல் படத்தைப் பார்க்க முடியுமா? 'ஓ, ஷ்யாம்! உன்னால் முடியுமா அது?' என்று நினைத்தபோது புன்னகை கோடிட்டது. கவுண்டரை நெருங்கி, சில்லறையைக் கொடுத்து டிக்கட்டுகள் வாங்கி க்யூவிலிருந்து பிரிந்து 'அவன் எங்கே?' என்று தேடியபோது, அவனைக் காணவில்லை. 'ஓ! ஏஞ்சல்!' என்று மனம் அலைந்து படபடக்க நின்றபோது — அவன் எதிரே நின்றான்.

**ராஜேந்திரகுமார் முடிக்கிறார்:**

'படவா ராஸ்கல்!' உள்ளுக்குள் வெடித்தான் அவன்.

''மிஸ்டர், டிக்கட் வாங்கிட்டீங்களா?'' அவள் கே. ஆர். விஜயாவாகச் சிரித்தாள். 'நான் டென்டிஸ்ட் அல்ல!' அலறினான் மனக்குள். அவளாகப்பட்டவள் சொல்கிறாள்: ''இஃப் யூ டோன்ட் மைன்ட் மிஸ்டர், மீட் மை எதிர்காலக் கணவர் மிஸ்டர் அசட்டு மூஞ்சி... இவர்ஒரே ஒரு டிக்கட் மட்டும்தான் வாங்கினாராம், அவருக்கு மட்டும்... நானு விடுவேன்? பெட் ரூம் மட்டும் தூரத்துவேனே! ஏய், பெரிய்ய ரோமியோ, அந்த சிங்கிள் டிக்கட்டை இவருக்குக் குடுங்க ஸ்வாமி! மிஸ்டர், ப்ளீஸ், நீங்க வாங்கியிருக்கிற டபுள் டிக்கட்டை, கார்னர் சீட்டானே?... எங்களுக்குத் தந்துதவ முடியுமா? இந்தாங்க... ஒரு சிங்கிள் டிக்கட் உங்களுக்கு.... தாங்க்ஸ்....''

'ஙே' என்று விழித்த ஷ்யாம் தியேட்டரை விட்டே வெளியே நடந்தான்.

அவர்கள் ஒவ்வொருவராக, ஒருவராகவே உள்ளே சென்றார்கள்!

**(எழுத்தாளர்கள் மன்னிக்க!)**



# மாலை சூட்டி மகளுக்கு
# மண வாழ்த்தொலிக்க ஓலை தீட்ட வாரீர்
# உங்கள் தவம் பலிக்க...



வாழ்நாள் கனவுகள் பலிக்க...
வாச மல்லிகை வீசிட,
வாழைகட்டி உங்கள்
வாசலில் கொட்டுமேளம் வாசிக்க...

ஆசைச் செல்விக்கு இல்லற வாசல்
திறக்க...

வருகுதே நாளும் கோளும், வருகுதே
வரன் - -
கல்விமானும், கைநிறைவாய் நல்வருவாய்
காண்பவனும், நற்குடி மகனும்,
பெற்ற தாய்தந்தைக்கு
இணையாய்ப் பெண் மீது
பேரன்பு பொழிபவனும்...

எப்படி எங்கு தேடுவீர் அப்படி ஒருவனை !
ஏடு விரித்து அழைக்கின்றோம்
தேடிக்கொள்வீர் - - தேர்ந்த வரன் :
குலமும் கோத்திரமும்
உயர் குடும்ப நிலையும்,
படிப்பும் பணமும் பண்பும் ஏற்றமுறப்
பொருந்துமாறு - -
எடுத்த எடுப்பில் கிட்டும் - -
பல்லாயிரம் குடும்பங்கள் ஆதரித்த
பாதையிலே, உங்கள் செல்விக்கு - -
மனம்போல் மாங்கல்யம் ...

உளம்போல் தேர்ந்தெடுப்பீர்,
விளம்பர மேடை இதோ

**THE TIMES OF INDIA**

**THE MATRIMONIAL COLUMNS**
**BOMBAY • DELHI • AHMEDABAD**

டைம்ஸ் ஆஃப் இந்தியா திருமணப்பத்திகள்
'காலங்கள்' எல்லாம் சுபம் சுபம் சுபம் !

SIMOES/BC/MAT/ SJ/81










# ஆபீஸ்

அக

"துரைலிங்கம்... வாப்பா... உனக்குத் தான் காத்துக்கினு இருக்கேன்... என்ன டிபன் கொண்டாந்திருக்கே?''

''இட்லி... ஒரு பிளேட் வடை சாம்பார் வாங்கியாறேன். சேர்ந்து சாப்பிடலாம்.''

''என்னப்பா கான்டீன்.... அன்னுடம் பொங்கல்தானு?....ஏம்பா... செகரட்டரிக்கு அல்வா மாசமும் மார்கழிதான் போல இருக்கு... தெனம் மெனுவில் பொங்கல் போடச் சொல்லிப்பிடுறாரே''

''பேருதான் பொங்கல். மிளகை லென்ஸ் வெச்சுத் தேடிக் கண்டு பிடிக்கணும். பொங்கல் செய்யறப்போ முந்திரிப் பருப்புன்னு உச்சரிச்சுக்கூட இருக்க மாட்டாங்க... தெய்வத்து பொய்தான்!''

''என்ன கே. வி. ... மெடிகல் பில் இன்னிக்காவது பாஸ் ஆகுமா?... கையிலே பண முடை....''

''மெடிகல் பில் என்னப்பா ஓவர் டைம் மாதிரியா... மாசா மாசம் நூறு இருநூறு போட்டுடிறியே... உன்னைப் பொறுத்தவரை நோயற்ற வாழ்வு குறைவுள்ள செல்வம்... போ.... போ.... உனக்கு வியாதி சோறு போடுது.....''

''அப்படிச் சொல்லாதேம்மா கண்ணு... இந்தா டீ சாப்பிடு... பக்கோடா வாங்கி வரட்டுமா?''

''.... என்ன உன் டிபார்ட்மெண்ட் ஒரே தலை கீழா குதிச்சுக்கிட்டு இருக்கு.''

''ஆடிட் பார்ட்டி வர்றாங்க.... எதைக் கேட்பாங்க.... எதைக் குடைவாங்கன்னு சொல்ல முடியாது... சர்வீஸ் புக் என்ட்ரி ஆறு மாசம் கம்ப்ளீட் ஆகணும்... அட்வான்ஸ் அக்கவுண்டில் மூணு மாசமாக ரிகவரி சரியாக இல்லை....''

''ஆடிட் பார்ட்டிக்குத்தான் நீங்க கடைசி நாள் பெரிய டீபார்ட்டி வச்சுடுவீங்களே... எல்லாம் சரியாயிடும்.''

''கஜபதி.... ஆர்டரைப் பார்த்தியா?''

''பார்த்தேன்பா... மயில்சாமியை டெஸ்பாட்சுக்குப் போட்டுட்டாங்க. நாகேஷைக் காஷியரா அப்பாயிண்ட் பண்ணியிருக்காங்க.''

''பொருத்தம்தான். நாகேஷ்... கேஷ்... டெஸ்பாட்ச் மயில்சாமி... மயில் விடு தூது... என்னப்பா சர்வர்... தோசை சொல்லி அரை அவர் ஆவுது. வெளி நாட்டிலேர்ந்து வரணுமா? எந்நேரம் ஆவுது?''

''தோசை போடற அன்னிக்கு அல்லாரும்சண்டை போடறாங்க. சின்னதோசைக் கல்லு. நாலு தோசைதான் ஒரு டைம்ல போடறாங்க.... வரேன் சார்.... சட்னி தீர்ந்துபோச்சு.சாம்பார் கொண்டாரட்டுமா?''

லாக்:

# கேண்டீன்

தியன்



''தம்பி....உன்னைத்தான். டேபிள் கிளீன் பண்ணு... கோபாலசாமி... இப்படித்தான் உக்காரேன்.... ரஞ்சனாவையும் சந்திரனையும் ஒரே செக்ஷனில் போஸ்டிங் போட்டாலும் போட்டீங்க. அங்கே வேலையா நடக்குது.... ஒரே அக்கிரமம்...''

''கோதண்டம்... உனக்கு வயசாச்சு... ரிடையர் ஆகியிருக்கணும், சரியான வயசைக் கொடுத்து இருந்தியான்னுக்க. இளசுங்க அப்படித்தான் இருக்குங்க. கண்டுக்காதே....''

''அதெப்படி கண்டுக்காம இருக்க முடியும்..... டீயட் பாடாத குறைதான் ஆபீஸிலே.... ...தம்பி ஒரு கிளாஸ் தண்ணி கொண்டா.''

''வரேன்பா... செக்ஷனில் ஏகப்பட்ட வேலை இருக்கு....''

''இருப்பா... ஒரு டீ சாப்பிட்டுட்டுப் போலயாம்.... ராஜேந்திரா... .ஒரு ஸ்பெஷல் டீ போடு.... ஆளைப் பார்த்துப் போடு... ஒரு ஒன் பை டூவாகப் போடுப்பா.''

''....அட இப்பத்தான் வரயா இட்டப்பா... இதுவரைக்கும் காத்துண்டு இருந்து இப்பத்தான் சாப்பிட்டேன்...என் வேட்டு?''

''ஆந்தைதான் இருக்குதே. அதுக்கு அல்சர். சோறு வேணும் தண்ணி வேணும். எல்லாருக்கும் அப்படியான்னு யோசிக்கணும். பன்னிரண்டு அம்பத்தஞ்சுக்குத் தொண்டை கட்டிய தவளைக் குரலில் ''என்ன இட்டப்பா... அந்த அர்ரியர் ரிப்போர்ட் ஃபைலை புட் அப் பண்ணுன்னு சொல்றது.''

''இட்டப்பா.... ஃபைலை புட்டப்பான்னு சொன்னுராக்கும்.''

''நீ ஒண்ணு ஜோக் அடிக்கறே. புட் அப் பண்ணிட்டு வரேன்பா... தோசை தீர்ந்து போயிருக்குமோ... போர்டுலே தோசைக்கு எதிரே 'இன்டு' போட்டுட்டாங்க.....

''சங்கரனை சஸ்பெண்ட் பண்ணப் போறாங்கன்னு கிசுகிசுவாக இருக்கே... உனக்கு ஏதாவது தெரியுமா?''

''போய்யா...கிரடேஷன் லிஸ்ட்லே தப்பு பண்ணிட்டாரு. அதுக்காக சஸ்பெண்ட் பண்ணுவாங்களா... கரெக்ஷன் போட்டுட்டா சரியாயிடுது... அல்லாம் யூனியன் செக்ரட்டரி பாலன் செய்யற கலாட்டா.''

''பாலன் பாடே ஆட்டம் கண்டு இருக்குது... விருத்தகிரிதான் அடுத்த செக்ரட்டரியாம்....''

''போ... பாலன் போய் விருத்தன் வரானுக்கும்... தம்பி... காப்பி ஸ்ட்ராங்காப் போடுப்பா......''












## 13

**நான் என்ன களிமண்ணா? இஷ்டப் பட்டவன் எல்லாம் இஷ்டப்படி உருவம் சமைத்துப் பார்ப்பதற்கு?**

குடுகுடு....குடுகுடு குடுகுடு ....குடுகுடு...

குடுகுடுப்பைக்காரன் அல்ல. அசல் பேயே அடித்துக் கொண்டு வந்தது. பனை உயரத் துக்கு, கன்னங் கரேல் என்று.

குடுகுடு... குடுகுடு குடுகுடு... ரெண்டு கொலை விழுகுது... விடிஞ்சா ரெண்டு கொலை விழுகுது... இந்த வீட்டு வாசல்ல ரெண்டு கொலை விழுகுது... ரெண்டு உயிரு அய்யோன்னு போவுது.... குடுகுடு.......

ரெண்டு உயிரு ஐயோனு போவுது. பேய் பல்லைக் கடித்துக் கொண்டு சொன்னது.

கலோசனா விழித்துக்கொண்டாள். ஆனால் தன்னையே யாரென்று அறிந்துகொள்ளத் தான் நேரம் வேண்டியிருந்தது — அன்று நளினியின் கடிதத்தைப் படித்த தினத் தன்று ஏற்பட்டது போலவே.

அவள் பதறிய பயத்தோடு தன்னைத் தேடினாள்: ''நான் யாரு? நான் யாரு?''

இதற்குப் பதில் கிடைக்கவே அவளுக்குப் பதினைந்து நொடிகளுக்கு மேலாயின. அவை தான் ,எப்படிப்பட்ட நொடிகள்!

அப்புறம் 'நான் எங்கே இருக்கிறேன்' என்ற தேடல். சுவர்க் கடிகாரத்தின் 'டிக்டிக்'கும் மின் விளக்கின் வெப்பும் துணை செய்த



ஜெயந்தன்

பிறகு தான் இருப்பது தங்கள் படுக்கை யறைதான் என்பது புலனாகியது.

அந்தக் குடுகுடுப்பைப் பேய்?

கனவுதானே? ஆமாம். கனவுதான். அம்மா! என்று அவள் நிம்மதிப் பெருமூச்சு விட்டாள். இதற்குப் பிறகுதான் தான் வியர்வையில் குளித்துப் போயிருப்பது உணர் வாகியது.

குடுகுடு.... குடுகுடு குடுகுடு....

சட்டென்று அவளுக்கு உடம்பு நடுங்கியது. என்ன விபரீதம் போய்க் கொண்டிருக்கிறது. கனவு போலவும், நிஜம் போலவும், தன் னையே மறந்தும், தெரிந்தும் மீண்டும் குழம் பியும்... என்ன சித்ரவதை இது!

குடுகுடு.... குடு குடுப்பையின் ஒலி அதிக மாகியது.

குடுகுடு.... குடுகுடு... நல்ல காலம் வருது நல்ல காலம் வருது. இந்த வீட்டுக்கு ஒரு நல்ல சேதி வருது... குடுகுடு....

கடைசியாக கலோசனாவுக்குத் தெளிவாகி யது. இந்தக் குடுகுடுப்பை, கனவும்தான் நிஜமும்தான். எங்கோ தூரத்தில் நிஜமான குடுகுடுப்பை ஏற்படுத்திய ஒலி கனவைத் தூண்ட, கனவு தான் விரும்பிய வடிவத்தை அமைத்துக் கொண்டிருக்கிறது.

'ரெண்டு உயிரு ஜயோனு போவுது' என் மூல் — இது எனது இந்த முன் இரவுத் தீர்மானமல்லவா?

இந்த முடிவுக்கு அவள் அப்போது எப்படி வந்தாள்?

இவள் வரதராஜுலு வைக்கும் வாதங் களை யெல்லாம் முறியடிக்கிறாள். வேண்டு



கோள்களை யெல்லாம் நிராகரிக்கிறான். தான் வெளியேறிவிடுவது என்பதில் உறுதியாக நிற்கிறான். இப்படி இவன் ஒரு சர்வ நிச்சய மானதொரு முடிவில் இருக்கிறான் என்பது உறுதியானதும் அவன் அதட்டி மிரட்ட ஆரம்பிக்கிறான். இது பின்னும் இவளது ஆத்திரத்தைக் கிளறுகிறது. இதுவல்லவா இவளது 'அசல்'. இந்த அராஜகத்தை முடிவாக வைத்துக் கொண்டு ஏதோ காரண காரியம் பார்ப்பவன் போல் வாதம் செய்து, அதில் தோற்றதும், ஏதோ மன்னிப்புக் கேட்கத் தெரிந்த மனிதன் போல் கெஞ்சி அதுவும் முடியாமல் போகவே எந்த நாகரிக உறுத்தலும் அற்ற பச்சை நிர்வாணமாகத் தன்னை வெளிப்படுத்திக் கொண்டு தடி தூக்குகிறானே.

'நீங்க என்னை மிரட்ட முடியாது. அது சட்டப்படியும் கூடக் குற்றம். நான் சுதந்திர மானவ. நான் எங்கே வேண்ணாலும் போகலாம். மனைவிங்கிறதுனால நீங்க விரல் நீட்டுற எடத்துல கை கட்டி, கால் கட்டி உட்கார நான் கொத்தடிமை இல்ல.'

இவள் கைப் பெட்டியோடு படி இறங்கும் போது அவன் மேல் நின்றுகொண்டு கனத்த குரலில் அதட்டுகிறான். ''கலோசனா, மேலே வா.''

இவள் அதை அசட்டை செய்துவிட்டு மேலும் இறங்கும்போது அவன் மடமட வென்று இறங்கி முந்தி, அவள் முன்னால் மறித்து நின்று 'ம், மேலே போ' என்கிறான்.

இவள் அவனைக் கீழ் நோக்கி முறைக்கிறாள். மீண்டும் அவள் கண்கள் பேசுகின்றன. 'ஓ, பிரச்னையின் தீர்வுக்குச் சதை பலத்தைத் துணைக்கு அழைக்கிறாயா! சபாஷ் காட்டுமிராண்டி!'

இறுதியாக இவள் 'சரி, இருக்கட்டும். இதற்கொரு மாற்று வழி காண்பிக்கிறேன்' என்று மனத்தில் கறுவிக் கொண்டே மேலே வருகிறாள்.

பிறகு அவன் வெளியே போனதும் இவள் பெட்டியை எடுத்துக் கொண்டு வெளியே வந்தால், வெளிக் கதவு பூட்டி யிருக்கிறது.

ஆ... இவளுக்கு அந்தக் கதவை முஷ்டியால் அடித்தே நொறுக்க வேண்டும் போல் இருந்தது. மானசீகமான கிளிக்கு இப்போது அசல் சிறையா? House arrest....ம்?.... Damn brute.

அவன் மீண்டும் மேலே வந்தபோது அவமானம் பிடுங்கித் தின்றது. தான் யார்? தனக்கு உயிர் சதை நகமென்று ஒன்றுமே இல்லையா? தான் என்ன களிமண்ணா? இஷ்டப்பட்டவன் எல்லாம் இஷ்டப்படி உருவம் செய்து பார்ப்பதற்கு? அந்த ஏகு தன்னை நேமியாக அனுபவித்துவிட்டுப்பின் தரையிலே அடித்து இனி நீ என்ன வேண்டுமானாலும் ஆகிப்போ என்கிறான். அவனை எதிர்த்துத் தன்னால் ஒரு சொல் கூறமுடியவில்லை. அன்னன்காரன் அவனது இஷ்டத்துக்குக் கண் காது மூக்கு வைத்து உள்ளத்தைத் திருகி ஒரு குடும்பப் பெண் வடிவம்கொடுத்து தாலியைக் கட்டிக் கொண்டு 'நட' என்றான். அந்தக் கட்டத்தில், ஓர் உயிர் போகும் கண்டத்திலிருந்து தப்பும் உபாயம் போல, சகலத்தையும் விழுங்கிக் கொண்டு, அவன் சொல்லைத் தலை மேல் தாங்கி நாடகம் ஆடினாள். வந்த இடத்தில் இவனோ, தனது உணர்வுகளை, தன்மானத்தை, சுதந்திரத்தை வெட்டிப்' புதைத்து உன்னைச் சிறையிலும் பூட்டுவேன் என்று மார் தட்டுகிறான். இவனை எதிர்த்தும் ஒரு துரும்பைக் கூட அசைக்க முடியாமல் இப்போது வீட்டுச் சிறையில் தரையை அளக்கிறாள்.

என்ன இது? 'தான்' என்று தனக்கு எதுவுமே இல்லையா? தான் என்ன புழுவா? புழுகூட கடைசி நேரத்தில் கடிக்குமே.

அவள் தன்னை அறியாமல் போய் மேஜையின் காலை உதைத்தாள். அங்கிருந்து கீழ் விழுந்த பொருட்களில் விளிம்பில் இருந்த கண்ணாடி டம்ளரும் ஒன்று. அது நொறுங்கியது. அது அவளுக்குச் சந்தோஷமாக இருந்தது. இந்த சந்தோஷத்தைத் தொடர்ந்து ஏதோ புது பலம் வந்தது போல் அந்த அறையிலேயே மீண்டும் வேகமாக உலாவத் தொடங்கினாள்.

அப்படிக் கழிந்தது ஒரு நிமிஷமா, பத்து நிமிஷமா, அரை மணி, ஒரு மணியா? மூன்று மணி நேரம்!

அவள் நடப்பதை நிறுத்திவிட்டுச் சுவர்க் கடிகாரத்தைப் பார்த்தபோது மணி ஒன்பது பதினைந்து.

அவள் போய்க் கட்டிலில் உட்கார்ந்து சொல்லிக் கொண்டாள். ''ஆல் ரைட். நான் உடைக்கிறேன். இந்தக் கோட்டையை உடைச்சுட்டே வெளியே போறேன். இவனுக்கு இவன் பாஷையிலேயே பதில் சொல்லிட்டு வெளியே போறேன்.''

குடுகுடு.... குடுகுடு... குடுகுடு....

குடுகுடுப்பை இப்போது இவர்கள் வீட்டு வாசலிலேயே கேட்டது. அதோடு இவள் துணுக்குற்று உடல் நடுங்கிவிடுகிற அளவுக்கு குடுகுடுப்பைக்காரனிடமிருந்து ஒரு அதட்டல்: 'ஏய் நொண்டி முனி, எங்கடி திடுதிடுனு ஓடுறே? நில்லுடி.. வந்து என் பின்னால நில்லு.'

ஒருவேளை இவர்கள் குடுகுடுப்பைக்காரன் மூலம் பேய்களைக் கொண்டு வந்து தன்மேல் ஏவிவிட ஏற்பாடு செய்திருப்பார்களோ?

---

## சபாஷ் வடம்பச்சேரி!

கோவை மாவட்டம் பல்லடம் தாலுக்காவிலிருக்கும் வடம்பச்சேரி கிராமத்தில் உள்ள மொத்தம் 451 குடும்பங்களும் தபால் ஆபீஸ் சேமிப்பில் கணக்கு வைத்திருக்கிறார்கள்! சேமிப்பில் வெற்றிக்கொடி நாட்டிய கிராமம் என்ற புகழைத் தட்டிக்கொண்டு விட்டது வடம்பச்சேரி. தகவல்: சாருகேசி





குழந்தைக்கு 3 மாதமாகும்போது, பால் மட்டும் போதாது

# உங்கள் குழந்தைக்குத் தேவை ஃபாரெக்ஸ்

குழந்தையின் உன்னத திட உணவு

**3-ஆம் மாதம்—திட உணவு துவங்கும் காலம்.**

3 மாதம் ஆனபின், குழந்தையின் வளர்ச்சிக்குப் பால் மட்டும் போதாது. குழந்தை சுறுசுறுப் பாயும் விரைந்தும் வளரும் சமயம்—பாலில் கிடைப்பதை விட அதிக கலோரிகள் தேவை. குழந்தைக்கு திரவ உணவைக் குறைக்கும் வகையிலும் அதிக கலோரிகளை வழங்கவும் மென்றுத் தின்னப் பழகவும் திட உணவு தேவை.

**3-ஆம் மாதம் அதிக இரும்புச் சத்து தேவை**

பிறந்த 2-4 மாதங்கள்தான் குழந்தைக்குத் திட உணவு துவங்க சிறந்த சமயம். பால் நல்ல உணவாயிருப்பினும் இரும்புச் சத்துப் பற்றாக் குறையினால் அது முழுமையாவதில்லை. ஆகவே, குழந்தைக்கு இரும்புச்சத்து அடங்கிய திட உணவுத்தேவைப் படுகிறது.

—Dr. Subhash C. Arya
"Infant & Childcare for the Indian mother"

**ஏன் டாக்டர்கள் ஃபாரெக்ஸ் சிபாரிசு செய்கிறார்கள்?**

குழந்தைக்கு திட உணவைத் துவங்குவதற்கு தனிப்படத் தயாரிக்கப்பட்டது—ஃபாரெக்ஸ். இதில் புரதம், கார்போஹைட்ரேட், கொழுப்பு, கால்ஷியம், பாஸ்பரஸ், மற்றும் வைட்டமின்கள் உள்ளன. இரும்புச் சத்தும் அதிகமுள்ளது—ஃபாரெக்ஸ். ஆகவே, குழந்தையின் விரைந்த முழு வளர்ச்சிக்கு உன்னதமான திட உணவாகிறது—ஃபாரெக்ஸ்.

---

இலவசம்! குழந்தையின் முதலாண்டு புத்தகத்திற்கு, 50 பைசா தபால் தலையுடன் எழுதுங்கள்.
த.பெ. எண் 19119,
பம்பாய்-400025.(FAR-202T)






**டாக்டர்கள் சிபாரிசு செய்வது ஃபாரெக்ஸ்**
**குழந்தையின் விரைந்த முழுவளர்ச்சிக்கு உன்னதமான திட உணவு**

CASGLF-10-203 TAM

குடுகுடு... நல்ல காலம் பொறக்குது... நல்ல காலம் பொறக்குது...குடுகுடு...குடுகுடு இந்த வீட்டு ஐயாவுக்கு உத்தியோகம் உயருது.... மாடு சேருது... மனை சேருது... குடுகுடு....

திடீரென்று மாடி முற்றத்திலிருந்து வரதராஜுலுவின் குரல் கேட்டது. ''எத்தினி மனைப்பா வருது?''

சட்டென்று குடுகுடுப்பை நின்றது. ஒரு பதினைந்து விநாடிகள் மௌனம். பிறகு அது தூரத்தில் பழையபடி மங்கி ஒலித்தது.

ஒன்று, பேய்களைக் கண்டு மனிதன் பயப்பட வேண்டும், அல்லது மனிதனைக் கண்டு பேய் பயப்பட வேண்டும். இரு சாராரும் பயமற்றுத் திரிந்து விடக் கூடாது என்பது குடுகுடுப்பை சித்தாந்தம் போலும்.

அங்கே அப்பொழுது வரதராஜுலுவின் குரலைக் கேட்டு சுலோசனா ஆச்சரியப்பட்டாள். இந்த மனிதன் எப்போது திரும்பினான்? அவ்வளவு அயர்ந்து தூங்கி விட்டாளா? இல்லை, தூக்கம் ஏது? அவ்வளவு இறுக்கமான கனவுகளில் இருந்திருக்கிறாள்.

லேசாக சிகரெட் புகையின் வாசனை உணர்வாகியது. சிகரெட் என்பது வரதராஜுலுவிடம் 'எப்போதாவது' என்கிற பழக்கம். ஓகோ, புண்பட்ட மனத்தைப் புகை விட்டு ஆற்றியாகிறதாக்கும்?

'ரெண்டு உயிரு அய்யோன்னு போவுது' அவள் கனவை நினைத்தாள். அந்த இரண்டாவது உயிர் எதற்காக? நியாயம்தானா? தெளிவில்லை. ஆனால் செய்யத்தான் வேண்டும். நாகப்பன் மேல் வன்மம் குறைய மாட்டேன் என்று பிடிவாதம் பிடித்தது.

சற்று நேரத்தில் வரதராஜுலுவின் காலடி இவள் படுத்திருக்கும் படுக்கையறை முன் கேட்டது. அவள் சட்டென்று பதறினாள். என்ன இது? இவன் இங்கு வரப் போகிறானா?

இது வரதராஜுலுவின் பழக்கம். இவள் கோபமும் அதிருப்தியும் உற்ற சமயங்களில் உடல் உறவு சுகத்தின் மூலம் அதைத் தேய்ப்பது. பல சமயங்களில் அதில் வெற்றியும் கண்டிருக்கிறான். இவள் விட்டுக் கொடுத்திருக்கிறாள். ஆனால் இப்போது?

அதை நினைக்கும்போதே அவளுக்கு அருவருப்பில் உடல் புல்லரித்தது. சீ... இனி மேலும். இந்த உறவா? தானென்ன ரோமானிய அடிமை சாம்ராஜ்யத்தின் விலைப்பட்ட தாதியா, ஆண்டையானவன் பின்னலைப் பிடுங்கித் தரையில் அறைந்துவிட்டு என் பின்னால் வா என்று சொன்னாலும் மறுமொழி பேசாது அவன் படுக்கை அறைக்குப் போவதற்கு? இல்லை, அது நடக்காது. நடக்காது.

வரதராஜுலுவின் எண்ணமும் அதுதான். மாலை இங்கு நடந்த போராட்டத்தில் ஆத்திரமுற்று, வீட்டைப் பூட்டிவிட்டு, உடனடி வடிகாலுக்காக நேரே ரேவதி வீட்டுக்குப் போனவன், அங்கு ஏதோ இரண்டு கிழங்கள் உறவென்று சொல்லி வந்து உட்கார்ந்திருப்பதைக் கண்டு வெறுமனே திரும்பி யிருந்தான். நேரம் போக்கப் புகுந்த ஒரு சினிமாவும் பயனில்லை,

அவன் மெல்ல வந்து அவளது தோளில் கை வைத்து அசைத்தான். 'சிலகா!'

அவள் போர்வையை உதறிக் குதித்தெழுந்தபடி ''இன்னொரு தடவை அந்த வார்த்தையைச் சொல்ல வேணும், சொல்ல வேணும், சொல்ல வேணும்'' என்றாள்.

''சாரி டார்லிங்!''

''டார்லிங்கும் வேணும், மண்ணும் வேணும்.''

அவன் குழைந்து பார்த்தான். ''சரி சுலோசனா, எந்தக் கோபத்துக்கும் ஒரு எல்லை இருக்கு இல்லியா? விடு!''

ஓ! பூட்டிச் சிறை வைத்துவிட்டுப் போனவன் எவ்வளவு சுலபமாகச் சமாதானம் பேசுகிறான்!

''எல்லை கடந்து போன விஷயம் இது.''

''நோ நோ கணவன் மனைவிக்கு இடையில எல்லைக் கோடே இருக்க முடியாது''—அவன் பேசிக் கொண்டே அணைத்தான்.

சுலோசனா கடுங்கோபத்தோடும் முறைத்தலோடும் சொன்னாள், ''விடுங்க!''

பதிலாக அணைப்பு மேலும் இறுகியது. இதனால் அவள் தனது பலத்தையெல்லாம் திரட்டிக் கொண்டு போராட ஆரம்பித்தாள். ஆனால் இவனோ கைக்குக் கை, காலுக்குக் கால் என்று ஈடு கொடுத்து சதை வெற்றி கொள்ளத் தொடங்கவே, அவள் முதலில் திகைத்தாலும், பின் இந்தத் தோல்விக்கு ஈடுதான் நாளைக்கு இருக்கிறதே என்று சமாதானம் செய்து கொண்டு, இது உனது கடைசி வெற்றி. பெற்றுக் கொள்''என்று போராடுவதை நிறுத்தினாள்.

ஆனால் இதை அடுத்து எழுந்த கோரமானதொரு புது அனுபவத்தைத்தான் அவள் எதிர்பார்க்கவில்லை. இதில் அவள் திக்குமுக்காடிப் போனாள். உடலே உள்ளத்தைக் காட்டிக் கொடுப்பதா? எண்ணங்கள் எரிமலையாகக் கொதித்துக் கொண்டிருக்க, உடலானது எதிரியோடு கைகுலுக்கத் தொடங்கி விடுவதா? மனமானது எதிரியை 'இரு, நாளைக்கு உனக்குச் சமாதி' என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே உடலானது தன் போக்கில் கிளர்ச்சி கொள்ளத் தொடங்கியது. இது சகிக்க முடியாத ஒன்று. இந்த உடலைத் தீயிட்டுக் கொளுத்த வேண்டும் என்று வந்தது அவளுக்கு. ஒரு கற்பழிப்பில் இதுதான் மிக உச்சமான, அராஜக, மன்னிக்க முடியாத குற்றமாக இருக்க வேண்டும். ஒருத்தியின் உள்ள சத்தியத்துக்கு எதிராக அவளது உடலையே கலகம் செய்ய வைத்து அவளை அனலில் வறுப்பது. இருந்தாலும் இவள் பல்லைக் கடித்துச் சொல்லிக் கொண்டாள். இந்த மனம் தோற்காது, தோற்காது. இது ஒரு ஜெயமும் ஆனது.

வரதராஜுலு மீண்டும் அறை வாசலைத் தாண்டும்போது படுக்கையிலிருந்து எழுந்தவாறே சுலோசனா ஆங்கிலத்தில் சொன்னாள், ''நீ ஒரு போலீஸ் ஆபீஸராக இருந்தும், ஒரு கற்பழிப்புக் குற்றத்தைச் செய்திருக்கிறாய்.''

''கற்பழிப்பு! மனைவியையே, கணவன். ம்?'' என்று மெல்லச் சிரித்துவிட்டு வெளியேறினான் வரதராஜுலு. (தொடரும்)

திரைஞானி : சினிமா

# ஆட்டோ ராஜா

● படத்தில் பைத்தியக்கார ஆஸ்பத்திரி வருகிறது. நிறையப் பைத்தியங்கள் வருகிறார்கள். கிட்டத்தட்ட கதையும் அப்படித்தான்.

'ஆட்டோ ராஜா' ஏழை. அவனைக் காதலிக்கும் 'மோட்டா ராணி' பணக்காரி. இவர்களது காதலுக்கு அடிப்படைக் காரணமே வலுவாக இல்லை. (சில்லறை கை மாறினால் காதல் பிறக்கும் என்றால் ஆட்டோ டிரைவர்கள் அத்தனை பேரும் காதலர்களே) அப்படிப்பட்ட காதலுக்கு நாலைந்து பேர் சேர்ந்து 'பிரேக்' போடுவதிலாவது அர்த்த மிருக்கிறதா? அதுவும் இல்லை!

கதையை விடுங்கள். நடிப்பு எப்படி?

ஆட்டோ டிரைவர் விஜயகாந்த் தம் நடிப்புக்கு அவ்வப்போது மீட்டர் போட்டு 'கட்' செய்து விடுகிறார். கேட்டால் 'கதாநாயகியாலே கெட்டேன்' என்பார், உண்மை தான்.

கதாநாயகி பெயர் காயத்ரி. வடக்கே இருந்து இறக்குமதி செய்யப்பட்ட 'கன' மான நடிகை! செயற்கையான புருவமும் முதிர்ந்த முகமும் அவரது நடிப்புக்கு மைனஸ் பாயிண்ட்ஸ். ('இதுக்கு பம்பாய் போகணுமா?' என்று பல தமிழ் நடிகைகள் முகத்தைச் சுளிக்கக் கூடும்.)

டாக்டராக வரும் தேங்காய் சீனிவாசன் நடிப்பில் அனைவரையும் ஓரம் கட்டிவிடுகிறார்.

ஜெய்சங்கர் 'இடைச் செருகல்'.

''எந்தப் படத்தில் வந்தாலும் உன் காதல் நிறைவேறாமல் போகக் கடவது' என எந்த முனிவரோ வனிதாவுக்குச் சாபம் கொடுத்திருப்பார் போலும், பாவம்!

ஆட்டோவில் ஏறியவர்கள் இறங்கும் போது மீட்டரைப் பார்த்துச் சலித்துக் கொள்ளாமல் இருந்தால் இந்தப் படமும் சலிப்புத் தட்டாது. ம் .. நடக்கிற காரியமா?



● வாஹினி ஸ்டூடியோ ஆறுவது ஃப்ளோருக்கு வெளியே நாலைந்து பேர் வட்ட மேஜையில் உட்கார்ந்து சீட்டாடிக் கொண்டிருந்தனர். அவர்களுள் நாலு பேர் முகம் நமக்குப் பரிச்சயமில்லாதது. அந்த ஐந்தாவது நபர்....

உற்றுப் பார்க்க வேண்டிய அவசியமே இல்லை! பிரபல இந்தி நடிகர் தர்மேந்திராதான்!

லட்சம் லட்சமாக வாங்கும் தர்மேந்திராவின் கைகள் சீட்டுக் கட்டைக் குலுக்கிக் கொண்டிருந்தன.

விசாரித்ததில் உள்ளே அவரது மனைவி ஹேமமாலினி 'சட்டம் ஒரு இருட்டறை' இந்திப் படத்தில் நடித்துக் கொண்டிருப்பதாகச் சொன்னார்கள். இன்னொன்றும் சொன்னார்கள். "நோ அட்மிஷன்!"

● ● ●

● நினைத்துப் பார்த்தேன். அதே இடத்தில் இரண்டு நாட்களுக்கு முன்பு தெலுங்கு நடிகரான சோபன் பாபு லட்சுமியிடம் சிக்கிக் கொண்டு படாத பாடு பட்டதை!

சோபன் பாபுவுக்குப் பரிச்சயமான ஒருவர் அவரிடம் நன்கொடை கேட்டு உடும்புப் பிடி பிடிக்க...

லட்சுமி அவரை உற்சாகப் படுத்தி மேலும் மேலும் கேட்கும்படி தூண்டிவிட....

வேடிக்கையாக இருந்தது.

"பாபு தங்கமானவர். அவர் வீடு தெரியும் இல்லையா? நாளைக்குக் காலையில் நேராக அவர் வீட்டுக்குப் போய்விடு. நிறையப் பணம் கொடுப்பார். தாராளமான மனசு அவருக்கு. நேற்றுக்கூட ஒரு பையனுக்கு ஸ்கூல் படிப்புக்காகப் பணம் கொடுத்தார்."

இப்படியாகத் தெலுங்கில் அவரிடம் சொல்லிக் கொண்டிருந்தார்.

சோபன் பாபுக்குத் தர்மசங்கடமான நிலை. மெல்லவும் முடியவில்லை விழுங்கவும் முடியவில்லை. அசட்டுச் சிரிப்புச் சிரித்தவாறே இருந்தார்.

நன்கொடை கேட்க வந்தவருக்கு உற்சாகம் பிறந்துவிடவே லட்சுமியைப் பார்த்து "நீங்க எலிசபெத் டெய்லர்" என வர்ணிக்க ஆரம்பித்துவிட்டார். பாபுவை ரிச்சர்ட் பர்டன் என வர்ணித்தார்.

என்ன சொல்லியும் 'பப்பு' வேகவில்லை.

அவர் அந்தப் பக்கம் நகர்ந்ததும் லட்சுமி சொன்னார்:

"இந்த ஆசாமி லட்சம் லட்சமாகச் சம்பாதித்தவர். அத்தனையையும் இரண்டே வருஷங்களில் தொலைத்து விட்டு வந்து நிற்கிறார்... பாவம்!"

## காமிராவைச் சுற்றி






## ஒரு கொலை படமாகிறது

● ஒரு மலையாளப் படத்தின் படப்பிடிப்பு. கீழே கண்ணாடித் துண்டுகள் முத்து முத்தாகச் சிதைந்து கிடந்தன. அதன் மீது கோட்டும் சூட்டும் பூட்சும் அணிந்த தாடிக்காரர் ஒருவர் மல்லாந்து படுத்துக் கிடந்தார். அருகில் பிரேம் நசீர் கையில் கண்ணாடித் துண்டை (பெரியது) வைத்துக் கொண்டு கீழே படுத்திருந்தவரின் வயிற்றில் குத்தத் தயாரான நிலையில் இருந்தார்.

ஒரு கொலை நிகழப்போகிறது என்பதைப் புரிந்து கொண்டேன்.

போலீஸ், கோர்ட், சாட்சி அப்படி இப்படி என்கிற விவகாரங்களில் மாட்டிக் கொள்ளாமல் ஒரு கொலையை நேரில் பார்க்கப் போகிறேன்!

அனுதாபப்பட நினைத்து 'பாவம், கொலை செய்யப்படப் போகிறவர் யார் என்பதை அருகில் நின்றவரிடம் விசாரித்தேன்.

'பாலன் கே. நாயர்' என்றார்.

சட்-புட்டென்று கொலை செய்ய வேண்டாமோ? ஊஹூம்!

ஒளிப்பதிவாளர் ''18 போடு... 20 போடு'' ரெட் ஷேட் கொண்டா'' என்று தம் உதவியாளர்களுக்கு உத்தரவு போட்டவாறே இருந்தார்.

ஒரு வழியாக 'ரெடி' என்றார்.

''ஆக்ஷன்.''

பாலன் கே. நாயரின் வயிற்றை நோக்கி நசீர் தம் கையில் உள்ள கண்ணாடியைக் கொண்டுபோனார். வயிறுஇருக்கும் இடத்தை நெருங்கியதும் நிறுத்திக் கொண்டார். நாயரோ சற்று தலையை உயர்த்தி, கண்களைப் பிதுக்கி, குத்துண்டவர் போல் முகத்தில் பாவம் வரவழைத்துக் கொண்டார்.

''கட்.''

இரண்டு முறை பிரேம் நசீர் அதே மாதிரி குத்துவது போல் பாவனை செய்தார். நாயரும் செத்துச் செத்துப் பிழைத்தார். காமிரா இடம் மாறி மாறி அதைப் படம் பிடித்துக் கொண்டது. என்ன அவஸ்தைடாப்பா என்று நினைத்துக் கொண்டேன்.

மறக்கமுடியாத மர்டர்!

● எஸ். பி. பாலசுப்பிரமணியம் ரொம்ப ரொம்ப பிஸியாகி விட்டார். பூஜை போட்டு முதல் பாட்டு ஒலிப்பதிவு செய்யப்படும் நாளன்றே ஒரு படத்திற்குப் பாட வருவதாக ஒப்புக் கொண்டு வரவில்லை. பிறகு அந்தப் பாட்டை மலேஷியா வாசு தேவனைப் பாடவைத்து ஒலிப்பதிவு செய்தார்கள்.

● 'தொடு வானம்' என்கிற புதுப் படம் ஒன்றுக்கு அடுத்தமாதம் பூஜை போடப் போகிறார் மனோபாலா. இதில் சுகாசினியின் அம்மாவாக நடிக்க ஸ்ரீவித்யா ஒப்புக் கொண்டுள்ளாராம்.

## புடவையில் ஸ்மிதா

● வானத்தை அண்ணாந்து பார்த்தேன்.-மழை வருகிறதா என்று!

''என்ன வானத்தைப் பார்க்கிறீர்கள்?'' என்பது போல என்னைப் பார்த்தார் ஸ்மிதா.

சிலுக்கு ஸ்மிதா 'தீராத விளையாட்டுப் பிள்ளை' படப் பிடிப்பில் புடவை கட்டிக் கொண்டு நின்றால் மழை வராமல் என்ன செய்யும்?

புகைப்படம் எடுக்க போட்டோகிராபருக்கு ஜாடை காட்டினேன்.

புடவையிலே படம் எடுத்துக் கொள்ள வேண்டுமா வேண்டாமா என்று முதலில் சிணுங்கினார் ஸ்மிதா. பிறகு சம்மதித்தார். புடவை என்றால் அவருக்கு அத்தனை கசப்பா?

அந்தப் பின்னலை அவர் முன்னே இழுத்துப் போட்டுக் கொண்டபோதுதான் 'அதை'க் கவனித்தேன். அடேயப்பா! அது எத்தனை நீளம்!

எனக்கு ஒரு சந்தேகம். புடவைக்குப் பின்னல் ஒத்துப் போகிறது. மாடர்ன் டிரஸ் அணியும்போது அத்தனை பெரிய கூந்தலை அங்கே எப்படி ஒளித்து வைப்பார்?

படம்: அருண்



# தமிழ் படிப்பது பாவமா?




தகுதிகள் : 1972ல் நாகர்கோவில் இந்துக் கல்லூரியில் தமிழ் இளங்கலைப் படிப்பு (B.A)

1974ல் சென்னை பச்சையப்பன் கல்லூரியில் தமிழ் முதுகலைப் பட்டம் (M.A. Second class Non - Semester)

1979ல் சென்னை, சைதை ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் ஆசிரியர் பயிற்சிப் பட்டம் (BEd - Second class Semester)

இந்தி மொழியில் பிரதமிக் தேர்ச்சி

வயது : முப்பது வயதைத் தாண்டியாயிற்று

முகவரி: அ. முத்தும் பெருமாள் M.A.BEd
பீமநகரி
திருப்பதி சாரம் (அஞ்சல்)
தாழக்குடி (வழி)
குமரி மாவட்டம்


[வேலை இல்லா இந்தப் பட்டதாரியின் ஏக்கம் இவரைப் போன்ற பல்லாயிரக் கணக்கானவர்களின் நெஞ்சக் குமுறலின் பிரதிபலிப்பு. வேலை தந்து உதவவோ அல்லது வேறு கூட்டு முயற்சியில் சுய வேலை வாய்ப்பில் இறங்கவோ விரும்புவோர் இவருடன் நேரடியாகத் தொடர்பு கொள்ளவும்.]

நான் ஏன் படித்தேன்? படித்ததினால் கிடைத்த பலன் என்ன? இதையா படித்தாய்! இந்தப் படிப்புக்கு என்ன வேலை கொடுக்க முடியும்? என்று ஏக்க உணர்ச்சியும் எக்காளப் பேச்சும் கேட்கும் தமிழ்த் துறை; கற்றுக்கொடுக்கும் பயிற்சி பெற்ற கல்வித் துறை; நான் படித்த துறை.

வேலை வாய்ப்பு அலுவலகத்தில் பதிவு செய்து ஏழாவது ஆண்டைக் கொண்டாடியும் படிப்புத் தகுதிக்கு ஏற்ப வேலை கிடைக்கும் என மற்ற துறையில் படித்தவர்களுக்கு இருக்கும் நம்பிக்கை கொடுக்காத அதிசயத் துறை. இன்று தமிழ் பாமரர் கையிலும் இல்லை; படித்தோர் தொகையிலும் இல்லை; பணமுடையோர், பதவியில் உள்ளோர் கையிலேயே இருக்கிறது.

'தமிழ் வாழ்க!' 'தமிழை வளர்ப்போம்!' என்று முழக்கமிடும் அரசியலார்க்குத் தமிழ் பதவியைக் காப்பாற்றுகிறது. 'தமிழ் கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே தோன்றியது! உலக மொழிகளில் தமிழுக்கு நிகர் இல்லை; இதில் இல்லாதது எங்கும் இல்லை' என்று ஆராய்ச்சிக் கருத்துக்களை அள்ளி வீசும் தமிழறிஞர்களின் வேலையைப் பறிபோகாமல் செய்கிறது.

பல்கலைக் கழகங்கள் வளர்க்கும் தமிழ் போதாதென்று தமிழ்ப் பல்கலைக் கழகமென்றும், உலகத் தமிழ்ச் சங்கமென்றும் அமைத்துக் கடைச் சங்க காலத்துக்கு அழைப்பது அச்சமாக இருக்கிறது. தமிழ் படித்த 'தற்கொலைப் படை'யின் எண்ணிக்கை அதிகரிப்பதைக் கண்டு இரங்கற்பா பாட வேண்டியிருக்கிறது.

தமிழாசிரியர் நியமனம் என்றார்கள். ஐந்தாண்டுக்கு மேல் வேலை வாய்ப்பு அலுவலகத்தில் பதிவு செய்தோர்க்கு முன்னுரிமை என்றார்கள். எல்லாம் பத்திரிகை விளம்பரத்தோடு நின்றன. இத்துறையைப் படித்துவிட்டு 'தானமானம் கொண்டு வெளியில் செல்லவும் முடியவில்லை; தரித்திரம் கொண்டு வீட்டிலிருக்கவும் இயலவில்லை. படித்துவிட்டுப் பட்டினி கிடக்கும் எங்கள் கூட்டத்தைக் குறிவைத்துத்தான் தீர்க்கதரிசி பாரதி 'தமிழ் இனி மெல்ல சாகும்' என்று தீர்க்கமாகச் சொல்லிவிட்டுச் சென்றானோ?

புலமை பெற்ற எங்களின் வறுமையைப் போக்கும் புரவலர்கள் யாரோ? 'தமிழ் நாட்டில் தமிழ் படிப்பது போன்று பாவம் வேறொன்றில்லை' என்று தமிழ் அறிஞர் ஒருவர் கூறிய இந்தப் பாவத்திற்குப் பரிகாரம் என்னவோ? காலத்தையும் கடன் வாங்கிய காசையும் விழலுக்கு இறைத்த நீராக இறைத்து விட்டு இலவு காத்த கிளியாக இருக்க வேண்டியதுதானோ? பெற்று வளர்த்தோரின் கனவு கானல் நீர்தானோ? காலம் தான் பதில் சொல்ல வேண்டும். கடவுள் பதில் சொல்ல மாட்டார்.

—அ. முத்தும் பெருமாள்

# நீலப் புடவையில் வெள்ளைப் பார்டர்

சுந்தரராஜன்

**பு**துத் துணியின் மணத்தை ஏந்திக் கொண்டு பொற் சித்திரமாக நுழையப் போகும் மீனுவின் வருகைக்காகக் காத்துக் கொண்டிருந்தான் வாசு. இதோ வரப் போகிறாள். அவன் அணைப்பில் அடங்குவாள்.....

கற்பனை ஏகமாய் இனித்துக் கொண்டிருந்தது.

பாலைக் கையில் ஏந்திய பருவப் பாவையும் வந்து சேர்ந்தாள்.

இருவர் வாழ்க்கையிலும் புரட்டப்படப் போகும் புதிய அத்தியாயத்திற்கான பூர்வாங்க ஏற்பாடுகள் தொடங்கின.

அவன் அணைப்பில் 'சிக்குண்டவாறே, அவள் முதுகில் கோலங்கள் போட்டுக் கொண்டே, அவன் மெதுவாகக் கேட்பான்:

''ஏங்க உங்களுக்கு எத்தனை சம்பளம்?''

கேள்வி கொஞ்சம் அசம்பாவிதமாகப் பட்டது.

''ம்.... எழுநூத்திப் பத்துன்னு பேரு! கையில் அறுநூறு, அறுநூத்தி இருபத்தஞ்சு வரும்.''

''ம்....அவ்வளவுதானா? கையிலேயே கிட்டத்தட்ட ஆயிரம் வரும்னு சொன்னாங்க!''

''அப்படியா, சாரி மீனு!'' — அவனுக்கு நடுத் தெருவில் எல்லோர் முன்னிலையிலும் அவமானப்பட்ட மாதிரி உணர்ச்சி வந்து கவ்விக் கொண்டது.

கொஞ்ச நேரம் மௌனம். சங்கடத்துடன் நடந்தது.

புதிய சுகம் காணப்போகிறோம் என்ற உணர்ச்சி, அந்த மௌனத்தை உடைத்து. இருவருக்கும் உறவின் சங்கமத்தின் பாதையைக் காட்டினாலும், ஓர் ஏமாற்ற ஆறு அப்பாதையின் அடியில் ஓடிக் கொண்டிருந்தது இருவருக்கும் புரிந்தது.

**"அ**ந்தப் புடவையைக் காட்டுங்க!''— புடவைகளை மீனு ஒவ்வொன்றாகக் காட்டிக் கேட்டுக் கொண்டிருந்தாள். புடவைகளின் நடுவில் தெரிந்த அந்த அழகு உருவத்தை ரசித்துக் கொண்டிருந்தான் வாசு.

அடேயப்பா, மீனுதான் எத்தனை அழகு! வாசுவுக்கும் பெருமையாக இருந்தது. 'நான் உண்மையிலேயே பெரிய அதிர்ஷ்டக்காரன்!' என்று சொல்லிக் கொண்டிருந்தான். மீனு புடவைகளைத் துளாவிக் கொண்டிருந்ததில் கூட வெளிப்பட்ட நளினத்தில் மயங்கிக் கொண்டிருந்தான்.

மயங்கினவனைச் சட்டென்று யதார்த்த நிலை எழுப்பி விட்டது. கைகள் சங்கடத்துடன் பையைத் தொட்டுப் பார்த்துக் கொண்டன. எத்தனை பணம் கொண்டு வந்தான்? கணக்குப் போட்டுப் பார்த்தான். எல்லாம் சேர்த்தால் மொத்தம் முந்நூற்று ஐம்பது தேறும்.

'கடவுளே, வீட்டுக்குப் போக அஞ்சு ரூபாய் போக முந்நூற்றி நாப்பதுக்குள்ள முடிஞ்சாத் தேவலை....'

அவனுக்கு மனைவியின் அழகு இப்போது மறைந்து விட்டது. நனவுலகின் கனம் அவனை அழுத்தி விட்டது.

'இளம்பும்போதே அவளிடம் தன்னிடம் இருக்கும் பணத்தைப் பற்றிச் சொல்லி இருக்க வேண்டும். சொல்லாமல் விட்டது மடத்தனம்' என்று நொந்துகொண்டான்.

''அந்த நீல நிறப் புடவையைக் காட்டுங்க பார்க்கலாம்.''

அந்த ஆகாய நீலப் புடவையை மேல் தட்டில் இருந்து எடுத்துப் போட்டார் கடைச் சிப்பந்தி. புடவை அழகாக, சின்னதாக ஒரு பார்டர் வைத்துக் கொண்டு, கவர்ச்சியாக இருந்தது. கண்டிப்பாக மீனுவின் உடற்கட்டுக்கும், தேக நிறத்துக்கும் எடுப்பாகத்தான் இருக்கும். விலைப் பட்டியலைப் பார்த்தான் வாசு. பகீர் என்றது. ஆயிரத்து இருநூறு!

முகம் வியர்த்துப் போனது. மீனுவைப் பரிதாபமாகப் பார்த்தான்.

மீனு புத்திசாலி! விஷயத்தை ஊகித்து விட்டாள்.

''ஆனா இதே மாதிரி என் கிட்ட வேறே ஒண்ணு இருக்கு. இல்லையா?''

**"எ**ன்ன யோசனை மீனு?''

தன் இடுப்பின் மேல் விழுந்த கையை லட்சியம் பண்ணாத மாதிரி மீனு பேசினாள்.

''அந்தப் புடவைதான் எவ்வளவு நல்லா இருந்துச்சு பார்த்தீங்களா? அதோட கலரும், பார்டரோட அழகும்... ஆனால் உங்க சம்பளத்தில் நான் அந்தப் புடவையைப் பத்திக் கனவுகூடக் காண முடியாதே!''

வார்த்தைகளில் மெல்லிய குத்தல் இருப்பதாகப் பட்டது. அவன் மனம் ஒரு கணம் செத்துப் போனது. தன் முகத்தைத் திருப்பி, மீனுவின் முகத்தை ஒரு வினாடி பார்த்தான். உள்ளம் சட்டென்று ஒரு முடிவு செய்தது.

''மீனு! உன் பட்டு மேனியில் அந்தப் புடவையைப் பூட்டி அழகு பார்க்கும்வரைக்கும் உன் மேனியில் கைவைக்க மாட்டேன்.''

அவனும் புரண்டு படுத்தான்.

**"நீ** ஓவர்டைம் பண்ணப் போறயா?''

''யெஸ் சார்...''

''என்னப்பா முந்தி யெல்லாம் நானே வந்து ஓவர்டைம் பண்ணப் போறயான்னு கேட்டால், 'நம்பளை விட்டுடுங்கோ சாமி! சாதாரணமாச் சம்பாதிக்க வர பணம்

போதாதா'ன்னு சொல்லுவே... இப்ப என்ன டான்னு....?''

வாசு அமர்த்தலாகச் சிரித்தான்.

''மனுஷன் மாறிண்டே இருக்கணுமே சார்!''

''ஓ.கே!''

மிஷினை நோக்கி நடந்த வாசுவின் மனத்தில் ஒரு காட்சி ஓடினது. மீனு அந்த ஆகாய நீல நிறப் புடவையைக் கட்டிக்கொண்டு வந்து இவனை நமஸ்கரிக்கிறாள். 'என்ன இருந்தாலும், என் புருஷர் இல்லையா?' என்கிறாள் பெருமையுடன். அவனை வாரி அணைத்துக் கொள்கிறான்.

'மீனு! பொறுத்துக்கொள் கண்ணே! ஆயிரத்து இருநூறு ரூபாய் புடவை... ஓவர் டைம் பார்த்தே சம்பாதிக்கிறேன்.'

அவன் உதடுகள் வெறியுடன் முணு முணுத்தன.

''என்ன அடிக்கடி ஆஃபிசிலே இருந்து லேட்டா வர்றீங்க?''

''என் நண்பன் ஒருத்தன் ஆக்ஸிடெண்டுல மாட்டிண்டான். அவனைப் போய் அடிக்கடி பார்க்கணும். யூனியன்லே நான் கொஞ்சம் பெரிய ஆள் இல்லையா?'' என்று அவளிடம் புளுகி வைத்தான்.

மீனு அதை நம்பிக்கேட்டுக் கொண்டாள்.

**ப**ணத்தை எண்ணிப் பார்த்தான்.

பரவாயில்லை! ஆயிரத்து நூறு சேர்ந்து விட்டது. எதிர்பார்த்ததை விடச் சீக்கிரமாகவே! வழக்கமான ஓவர்டைம் தவிர ஞாயிற்றுக் கிழமைகளில் அவன் நண்பனுடைய சிறிய தொழிற்சாலையில் வேலை செய்து கொடுத்தது சேமிப்பைத் துரிதமாக்கியது. மீனுவின் பெற்றோர்கள் பக்கத்து ஊரில் இருந்ததும், அவர்களுக்கு அவள் மேல் எக்கச்சக்கமாகப் பாசம் இருந்ததால் அவள் அடிக்கடி அங்கே சென்றதும், அவனுக்கு ஒரு விதத்தில் சௌகரியமாகப் போயிற்று!



'மீனு, இன்னும் ஒரே மாதம்...' வழக்கமான கனவுக் காட்சி ஓடியது. மீனு அந்த ஆகாய நீல நிறப் புடவையைக் கட்டிக் கொண்டு வந்து...

கனவின் இனிமையைக் கலைக்கும் வண்ணம் மெல்லிய இருமல் ஒன்று ஆரம்பித்தது. அது மெதுவாக வளர்ந்து, சுமார் மூன்று நிமிடங்கள் நீடித்தது.

"எங்க அத்தை வந்து இருக்காங்களாம். போய்ப் பார்த்துட்டு வந்துடவா. இரண்டே நாள்...."

இரண்டு நாள்!

'நாளைக்குச் சம்பளம் வரும். நாளைக்குப் போய்ப் புடவையை வாங்கி வந்துவிட்டால் நாளன்றைக்கு அவள் வரும்போது அவளிடம் காட்டித் திக்குமுக்காட வைக்கலாம்.'

"ரெண்டு நாள்லே வந்துடுவே இல்லையா மீனு."

"கண்டிப்பா!"

"சரி, போய்ட்டு வா!"

மீனு குதித்துக் கொண்டு போனாள். அவளுக்கு ஊருக்குப் போவதென்றால் எப்போதுமே சந்தோஷம்தான்.

'மீனு, என் சபதம் நிறைவேறப் போகிறது' இவன் இருமினான்.

புடவையைப் படுக்கை மேல் வைத்துப் பார்த்தான்.

உண்மையாகவே எடுப்பான நிறம்தான். நீல வர்ணத்தில்; ஓரத்தில் வெண்மையான பார்டருடன்...

'மீனு, இதைப் பார்த்ததும் நீ எப்படித் துள்ளப் போகிறாய்! அப்படியே என் கழுத்தைக் கட்டிக் கொண்டு, குழந்தை மாதிரி குதூகலிக்கப் போகிறாய்...'

உள்ளத்தின் கனவுகள் நீண்டு கொண்டே போக–

இதோ வந்து விட்டாள் மீனு!

"கரெக்டா இரண்டே நாள்ல வந்துட்டேன் பார்த்தீங்களா?"

அவன் பார்சலை மறைத்துக்கொண்டான்.

"என்னங்க சஸ்பென்ஸ்?"

அவன் உள்ளம் படபடவென்று அடித்துக் கொண்டது.

"மீனு, கண்ணை மூடிக்கோயேன்!"

அவள் பிகு செய்துவிட்டு, பின் மூடிக் கொண்டாள்.

"ம்... இப்பத் திற..."

அவள் மென்மையாகக் கண்ணைத் திறந்தாள்.

"ஓ... நீலப் புடவை..." – அவள் ஆர்வத்துடன் வந்து பிடுங்கிக் கொண்டாள். வாசுவின் உள்ளம் பெருமையில் பொங்கி வழிந்தது!

என்ன இது! மீனுவின் முகம் சுருங்குகிறதே!

"என்னங்க இது! செலக்ஷன்னு என்னன்னு தெரியுமா, உங்களுக்கு?"

வாசுவின் உள்ளம் அடிபட்டுப் போனது. "என்ன மீனு?" என்று கேட்க விரும்பினான். முடியவில்லை.

இருமல் தொடங்கி விட்டது.

"சே, வாங்கத் தெரியலேன்னு, ஏன் நீங்களாப் போய் முந்திரிக் கொட்டை மாட்டமா வாங்கணுமோ தெரியல்லே! இந்தப் புடவையிலே அன்னிக்குப் பார்த்த அந்தச் சிவப்பு பார்டர் எவ்வளவு பாந்தமா இருந்துச்சு! நீங்க என்னுடான்னு... வெள்ளைப் பார்டர்...."

அவன் திரும்பிப் பார்த்தாள். வாசு தரையில் உட்கார்ந்திருந்தான்.

"என்னங்க?"

அவள் அவன் அருகில் ஓடினாள்.

அவன் தலையை அசைத்துக் கொண்டு முகம் சிவக்க இருமிக் கொண்டிருந்தான். அடக்க முடியாமல் எச்சில் கோழையாக வந்து தரையில் விழ–

ஒரு துளி ரத்தம் அதில் இருந்து தெறித்து அவள் கையில் இருந்த ஆகாய நீல நிறப் புடவையின் வெள்ளை பார்டரில் படர்ந்தது.

---

ஏப்ரல் 18

புத்தாண்டு மலர்

கேள்வி பதில்



இல்லத்தரசியை இன்னொரு வீட்டரசியே
புரிந்து கொள்ள இயலும்!

ULKA-RM-IR-81 TAM

## எனவே புதிய ராலிமிக்ஸ் ஸூப்பர் டீலக்ஸ் எப்படி அமைய வேண்டும் என்று ஒரு குடும்பத்தலைவியைக் கேட்டறிந்தோம்.



ஆகவே அத்தனைச் சிறப்புகளும் இதில் உண்டு. வேறெந்த மிக்ஸரும் இதற்கு இணையாகாது என்பதை நீங்களே கண்டறியலாம்.

### பன்முகப்பயன் பிளேடு

நிரந்தரமான, கூடுதல் கூர்மையான, பன்முகப்பயன் பிளேடு-எல்லா வகையான அரைவைகளையும் சீராகச் செய்ய விசேஷ கோணத்தில் அமைக்கப்பட்டுள்ளது. பிளேடை மாற்றும் அவசியமே இல்லை. ஆகவே கழற்றி மாட்டும் பிளேடுகளைப்போல, விபத்துகள் நேரும் அபாயம் இல்லை

### இரட்டிப்பு ஆதாயம்

கூடவே இரண்டு கலவைக் கிண்ணங்கள். உலர்ந்த அல்லது நனைந்த அரைவைக்கு ஸ்டெய்ன்லெஸ் ஸ்டீல் கிண்ணம்-மற்றது வெளிநாட்டு பிளாஸ்டிக் கிண்ணம்.

### வசதியான இஞ்சர் பட்டன்

சிக்கிக் கொள்ளாத, வசதியான புஷ் பட்டன் அமைப்பு.




புதிய
**ராலிமிக்ஸ்**
ஸூப்பர் டீலக்ஸ்

உங்கள் எண்ணத்தை எடுத்து
ராலீஸ் வண்ணம் கொடுத்துள்ளது.

உ

நாளைய நாளினை அறிகின்ற நறுங்கலை ஜோதிடத்தை
நாடியே கற்றிடுவீர் நல்வாழ்வு பெற்றிடுவீர்

# ஜோதிடப்பயிற்சி

(தபால் வழி போதனை முறைப் பயிற்சி)

வருங் காலம் சொல்லுங்கலை — வையத்துள் உயர்ந்த கலை. படிப்பாரா? பதவிகள் பெறுவாரா? பான வகரம் பிடிப்பாரா? பார் மணக்க வாழ்வாரா? என்றறிந்து ஏற்ற வழி சென்று இனிய வெற்றி பெற்றிடவே — இது கலை துணை நிற்கும். வீடு கட்டும் யோகமுண்டா பெற்றோரைப் பேணுவாரா — கரம் பிடித்த மனைவியை காலமெல்லாம் காப்பாரா — என்றெல்லாம் கண்டறிந்து அவருக்குகந்த வழி தேர்ந்தெடுத்து தென்றலொத்த வாழ்வு தர இது கலை உதவி செய்யும். இக்கலையை எவரும் இது வரை பிறருக்குச் சொன்னதில்லை. இதன் பெருமைகளை விண்டதில்லை. கண்டறிந்த கலைகளிலே தலைமை நிலை பூண்ட கலை. அரியதோர் விருந்துக்கு அணிவகுத்து வந்திடுவீர். புதிய பாடங்கள் — பூவிரிக்கும் விளக்கங்கள் எளியமுறை — போற்றிப்பு. இனிக்கின்ற தமிழ்ப் படைப்பு. — பாடத்துடன் தருகின்ற நாட்குறிப்பும் — ராசி பலனும் — உங்களை காலத்தை அளக்கின்ற கலைஞானம் பெறவைக்கும். மாதமொரு கலை நுணுக்கக் கட்டுரையும் பாடத்துடன் இணைத்து பலா கனியாகக் தருகின்றோம். கற்று முடித்தார்க்கு — சான்றிதழும், பட்டமும் சாலச் சிறப்பாக தருகின்றோம். அரியதோர் வாய்ப்பு இது.

சேரும் முறை செலுத்தும் கட்டணம் அறிந்திட 50 ந.பை. தபால்தலை ஒட்டிய சுய விலாசமிட்ட கவரினைத்து — 20-4-1982 தேதிக்குள் மனுச் செய்து கொள்க. வெளி நாட்டன்பர்கள் — பதிலுக்கான இண்டர் நேசனல் கூப்பன் வாங்கி வைத்து அனுப்பிடுக.

குறிப்பு: கற்று வரும் மாணவர்கள் கவனத்திற்கு — இம்மாத பாடங்கள் தயாராக இருக்கின்றபடியால் — கட்டணம் அனுப்பி — பாடங்களையும், ராசி பலன், இல்லிட வாசமும், இனியதோர் யோகமும் என்ற இணைப்புக் கட்டுரையும் பெற்றிடுங்கள்.

பிரபல ஜோதிடர். ஜோதிடஆசிரியர்

## ஸ்ரீமத் ஜெயவீரதேவா

யோகி, ராஜயோகப்பயிற்சியாளர்

பிளாட் நெ. 204, கதவு எண் 5
அண்ணா நகர், மதுரை - 625 020

# சாபக்கேடோ?



இதோ ஒரு கிராமம்

ஊர் மக்கள் அறியாமையால் செய்த தவறு ஒரு கிராமத்தையே பழி வாங்கி விட்டது. கப்பராயர் என்பவரை இவ்வூர் மக்கள் ஓட ஓட விரட்டியடித்ததால், அவர் போகும்போது, 'இந்தக் கிராமமே வெறிச் சோடிப் போகட்டும்' என்று சாபமிட்டுப் போனாராம். இது சினிமாக் கதையல்ல. திருநெல்வேலி ஜில்லா சாத்தான்குளம் வட்டத்தில் உள்ள 'கப்பராயர்புரம்' கிராமத்தின் உண்மைக் கதை. பிறகு தவறுக்கு வருந்தியவர்கள் தங்கள் ஊருக்கு அவருடைய பெயரை வைத்து விட்டார்களாம்.

சாபம் மட்டும் நீங்கின பாடாகத் தெரியவில்லை. இன்றைக்கும் அவ்வூர் வெறிச் சோடிப் போய்த்தான் காணப்படுகிறது. வறட்சிப் பகுதிகளில் திருநெல்வேலி மாவட்டமும் ஒன்று. அங்குள்ள கப்பராயர் புரத்தில் மட்டும் மழை பெய்து விடுமா என்ன?

மக்கள் பிழைப்பதற்காக வெளி மாவட்டங்களுக்கும், வெளி தேசங்களுக்கும் போய் விட்டார்கள். பெரும்பாலோர் இலங்கைக்குப் போயிருக்கிறார்களாம். அங்கிருந்தெல்லாம் பணம் இந்தக் கிராமத்தினுள் நுழைந்தாலும் வசிப்பதற்கு ஆட்கள் இல்லை.

பெண்களைத் தெருக்களில் பார்க்கவே முடியாது. 'வயது வந்த பெண்கள் தெருவில் வரக் கூடாது!' இந்தக் கிராமத்தின் கடுமையான கட்டுப்பாடு. எப்படியோ கப்பராயரின் சாபம் பலித்து விட்டது!

ஆவணி மாதம் மாரியம்மனுக்கும், புரட்டாசியில் பெருமாளுக்கும் விழா எடுக்கின்றனர். அப்பொழுது மட்டும் எங்கிருந்தாலும் சொந்தக் கிராமத்துக்கு வந்து விடுகிறார்கள் இந்த மக்கள். பெண்களும் இவ்விழாக் காலத்தில் மட்டுமே ஒன்று கூடுகிறார்கள். இந்தச் சமயங்களில் கிராமமே விழாக் கோலம் பூண்டு விடுகிறது.

மற்றபடி எந்தவிதமான முன்னேற்றமும் இக்கிராமத்துக்குக் கிடையாது. பல்லாண்டுகளாக பஸ் வசதி இல்லாமல் இருந்து, திருச்செந்தூர் எம். எல். ஏ. அமிர்தராஜும் மற்ற பெரியவர்களும் பெரு முயற்சி எடுத்துப் பேருந்து நடத்தை ஏற்படுத்தினார்களாம். ரோடு சரியில்லை என்ற காரணத்தால் அதுவும் இப்போது இல்லை.

அதேபோல் பள்ளி வசதியும் இங்கு கிடையாது. 'நேரு வித்து ஆரம்பப் பாடசாலை' மட்டுமே இருக்கிறது. உயர்நிலைப் படிப்புக்கு ஒரு மைல் தள்ளி முதலூருக்குத்தான் போக வேண்டும்.

இதுநாள்வரையில் வேறு தொழில் அறியாமல், வானமும் பொய்த்து, விவசாயத்துக்கும் வழியில்லாமல் வாழ்ந்து கொண்டிருந்தார்கள். 'வாலிபர் நற்பணி மன்றம்' என்னும் அமைப்பு நிறுவப்பட்டுள்ளது. இம் மன்றம் 'இளைஞர்கள் சர்வோதய சங்கத்தின் உதவியோடு கிராம நூற்பாலைத் திட்டம் அமைக்க முயன்று வருகிறது.

பாரதத் திருநாட்டின் உயிர்நாடிகள் என்று சொல்லப்படும் லட்சக் கணக்கான (வறுமையால் வாடும்) கிராமங்களில் இதுவும் ஒன்று.

எஸ். ஜெகவீரபாண்டியன்

## 13

அதற்குப் பின் நாட்கள் மிக மகிழ்ச்சியாக விரைவாக மறைந்தன. பூதனூரில் அவன் அவளைத் தினசரி ஒரு முறையேனும் சந்திக்காது இருந்ததில்லை. ஆனால் பேச்சுக் கொடுத்துத் தங்களுக்குள் வளர்ந்துகொண்டு வரும் நெருக்கத்தைப் பகிரங்கப்படுத்திக் கொண்டதில்லை. அந்த வகையில் அவன் மிகவும் கௌரவமாகவே நடந்து கொண்டான்.

மாலை பள்ளிக்கூடம் முடிந்ததும் அவள் வெளியில் வந்து பஸ் நிலையத்தை அணுகும் போது அவனும் தனது பாலி ஜின்னிக்கி ளின்று வெளிப்படுவான்.

தெரு ஓரத்தில் கார்களிடையே நிறுத்தப் பட்டிருக்கும் தன் மோட்டார் சைக்கிளை எடுக்க வந்தவன் போலத் திரும்பும்போது அவனது கண்கள் அவளது கண்களை நேச பாவத்துடன் சந்திக்கத் தவறியதேயில்லை.

முன்பெல்லாம் காலையில் குளியலை அவசரமாக முடித்துக் கொண்டு வேகமாகத் தயாராகி வீட்டை விட்டு ஓட்டமும் நடையுமாக பஸ்ஸைப் பிடித்துப் பள்ளிக்கூடம் செல்ல வேண்டியது தவிர்க்க முடியாத ஒரு கடமையாக அவளுக்குத் தோன்றியது. இப்போது நிலைமை தலைகீழாக மாறிவிட்டது. வேலைக்குச் செல்ல அவளுள் ஒரே துடிப்பு. நாள் முழுவதும்ஓயாது ஒழியாது செய்த வேலையின் அலுப்பை அவள் அந்தக் கனிவுப் பார்வையில் மறந்தே போனாள். ஒரே ஒரு தடவை — ஒருசில நிமிடங்கள் என்றாலும்... அவனைப் பார்ப்பது ஓர் இனிய அனுபவமாக அவளுக்கு மிக்க உற்சாகத்தைத் தந்தது உண்மை.

வார இறுதியில் — சனி ஞாயிறு காலை வேளைகளில் கிராமத்துக் கிளினிக்கைக் கவனிக்க வந்த அவன் திரும்பும்போது தவறாமல் ஏதோ ஒரு காரணத்தைச் சொல்லிக்கொண்டு அவர்களைக் காண வந்தான். ''லாம்ஸைப் பார்க்கணும்போல இருந்தது வந்தேன்!...''

''உங்க தோட்டத்து எலுமிச்சம் பழம் இரண்டு கிடைத்தால் நலமாக இருக்கும், கேட்டுப் பார்க்கலாம்னு வந்தேன்!''

ஏதோ ஒன்றைக் கூறி உள்ளே வந்தவனை அத்தை ஜெகதா மலர்ந்த முகத்துடன் வரவேற்றாள். முன்னைவிட மிகவும் அக்கறையுடன் காலை பலகாரங்களை அவன் கவனித்துச் செய்து வைத்தாள்.

''குழாய்ப் புட்டு வெள்ளைப் பணியாரம் இதெல்லாம் ஹோட்டலில் யார் செய்து தருவாங்க... சும்மா சாப்பிடு தம்பி...

காப்பியுடன் அந்தக் காலை வேளைகளில்

‘லக்ஷ்மி’

# சாதாரண

அவளைப் பலமாக உபசரித்தாள். உலக அனுபவத்தின் எல்லைக் கோட்டை நெருங்கி விட்ட அத்தைக்கு அவனது வருகையின் காரணம் புரியாமலில்லை.

முன்னைவிட சந்தியா இப்பொழுதெல்லாம் சாந்தமாகக் காணப்பட்டாள். விடியு முன்னே எழுந்து குளித்து – கச்சிதமாக உடுத்திக் கொண்டு... தோட்ட வேலைகளைச் சடுதியில் முடித்துவிட்டு...பாடம் தயாரிக்கக் குறிப்புப் புத்தகங்களுடன் மேஜையருகே கூடத்தில் உட்கார்ந்து விடுவதையும் மோட்டார் சைக்கிள் ஒலியைக் கேட்டதும் முகம் சிவந்து கண்கள் பளபளக்க வாயில் பக்கம் ஓடிச் சென்று எட்டிப் பார்ப்பதையும் பாராதவள் போல அத்தை... மகிழ்ச்சியுடன் சமையல் அறைக் காரியங்களில் ஈடுபட்டிருப்பதைப் பழக்கமாக்கிக் கொண்டிருந்தாள்.

சகோதரனின் மூன்று பெண்களில் சந்தியாதான் அம்மாவின் நிறத்தையும் அத்தனை அழகையும் அள்ளிக் கொண்டு பிறந்திருந்தாள். அதைப் போலவே அப்பாவின் முன்கோபமும் அவளது பரம்பரைச் சொத்து.

படபடவென்று பொரிந்து கொட்டிக் கோபத்தில் வெடித்துவிடும் இந்தப் பெண்ணை எவன் கட்டிக் கொண்டு சிரமப்படப் போகிறானோ என்று உள்ளூற ஜகதாவுக்குக் கலவரம் தான்.



கிரிதரன் நெருக்கமாக அவர்களுடன் பழகத் தொடங்கியபோது அவளது கவலைகள் லேசாகப் போயின.

தோற்றத்தில் இருவரும் நல்ல பொருத்தமான ஜோடிதான். – சந்தியாவின் தங்க நிறத்துக்கு அவனது கோதுமை வண்ணம் சோடை போகவில்லை. பொறுமையின்றிச் சீறிவிழும் சந்தியாவின் முன் கிரிதரன் சாந்தத்தின் சிகரமாக இருந்தான்.

இப்படி மாறுதலானகுணமுடையவர்கள் திருமணத்தில் இணைவது ஒரு வழியில் நல்லதுதான். ஒருவருக்கொருவர்சுடுகொடுத்து வாழ்க்கையைச் சீராக அமைத்துக் கொள்ள முடியும்.

இரண்டு பேரும் படித்தவர்கள் – திறமை மிக்கவர்கள் – பொறுப்புக்களை உணர்ந்தவர்கள் – இருவருக்கும் பொதுவான சில விருப்பு – வெறுப்புகள் – அபிப்பிராயங்கள் ஒத்துப் போயின. – பலவாறு தனக்குள்ளே

# மனிதன்



**ஓவியக் கவிதை**

மேற்கு ஜெர்மானிய ஓவியர் ஃப்பிரிட்ஸ் கோத்தே தீட்டிய இந்த மாடர்ன் ஆர்ட்டுக்கு ஏற்ப ஒரு மாடர்ன் கவிதை எட்டு, பத்து வரிகளுக்கு மேற்படாமல் தபால் கார்டில் மட்டுமே எழுதி அனுப்புங்களேன். ''ஓவியக் கவிதை'' என்று தலைப்புத் தரவும்.

பிரசுரமானால் பரிசு உண்டு.

முடிவு தேதி: 22–4–82.

சிந்தித்துக் கொண்டு ஜகதா அவர்களது நெருக்கத்தைக் கண்டும் காணாதது போல இருந்தாள். சில சமயங்களில் ஆதரவாக இருக்கவும் முயன்றாள்.

''சந்தியா! டாக்டர் வந்திருக்கார்... நான் தோட்டத்திலிருந்து எலுமிச்சம் பழம் பறிச்சுட்டு வரேன். நீ சீக்கிரம் காப்பியைக் கலந்து வைம்மா....'' — வேண்டுமென்றே அவர்கள் தனியே பேசிக் கொள்ள வாய்ப்புக்களை உருவாக்கித் தந்தாள்.

சீக்கிரம் ஸ்ரீதரனும் சந்தியாவும் ஒரு நல்ல முடிவுக்கு வந்து விட்டால்...

அனலாடீஸ்வரர் கோவிலுக்கு ஆண்டவனைத் தரிசிக்கச் சென்ற போதெல்லாம் அத்தையம்மாள் அடிக்கடி பிரார்த்தித்துக்கொண்டாள். 'சீக்கிரம் சந்தியாவுக்கு ஒரு நல்ல வழி செய்யப்பா... ஈஸ்வரா....'

அப்படியொன்றும் ஸ்ரீதரன் காசு பணம் ஒன்றுமே இல்லாத பரதேசிப் பெண்ணைக் கட்டிக்கொள்ளப் போவதில்லை.

வரதட்சிணை என்று கையில் பணம் ஏதும் கொடுக்கும் காரியம் சந்தியாவுக்குப் பிடிக்காது. — ஒப்புக்கொள்ள மாட்டாள்.

இருவரும் மனம் ஒப்பி நல்ல முடிவுக்கு வந்தால் தன் கணக்கில் வங்கியில் மொத்த முதலீட்டிலிருக்கும் பணத்தை முறித்தெடுத்து எளிய முறையில் கோவில் மண்டபத்தில் ஜகதாவால் கல்யாணத்தை முடித்து வைக்க முடியும்.

பெண்ணுக்குச் சீதனமாக அவளது அப்பா விட்டு வைத்திருக்கும் அந்த வீடும் தோட்டமும் இன்றைய விலைக்கு ஒரு கணிசமான தொகைக்குச் சமம். போதாததிற்குப்பரணில் கிடக்கும் அவளது பாத்திரங்களை எடுத்துத் துலக்கிப் பாலிஷ் போட்டுக் கொடுத்தால் போச்சு. நகைகள்?... சந்தியா மேல் அதிகம் இல்லைதான்: இரும்புப் பீரோவில் லாக்கரில் தூங்கும் அவளது இரண்டு கொத்து தங்கச் சங்கிலியை மெருகு போட்டுவிடுவது — இந்த வயசில் இனிமேல் ஜகதாவுக்கு நகைகள் எதுக்கு?

கடமையை முடித்துக் கொண்டதும் அக்கடா என்று காலம் முழுவதும் நிம்மதியாக அவள் அவர்களுடன் அந்த வீட்டிலேயே தங்கிக்கொள்ள முடியும்.

உடம்பு வந்தால் டாக்டர் ஸ்ரீதரன் சொந்த மகன் போல் பார்த்துக்கொள்வான்.

உயிர் போய்விட்டால் அவர்கள் இருவரும் உற்ற மரியாதையுடன் அவளை ஒப்பேத்தி விடுவார்கள் இல்லையா?

இரவும் பகலும் இதே சிந்தனையாக இருந்தாள் ஜகதா.

**ப**ல வாரங்களாக அந்தப் பக்கமே வராதிருந்த குமரேசன் அன்று காலை ஊரான் வீட்டுக் கார் ஒன்றில் தன் உறவினர்களைக் கண்டு நலன் விசாரிக்க வந்திருந்தார்.

தெருவில் வீட்டுக்கு முன் மோட்டார் சைக்கிள் நிற்பதைக் கண்டதுமே மனிதன் முகம் இறுகிப் போனார்.

விடுவிடுவென்று நடந்து வந்தவர் காதில் உள்ளே இருந்து சிரிப்பொலி கேட்டது.

நகைச் சுவையானதொரு கதையைக் கேட்டுவிட்டு எல்லோரும் சேர்ந்து சிரிக்கும் சாதாரணமான மகிழ்ச்சி பொங்கிய சிரிப்பல்ல அது. நெருக்கமாகப் பழகிவிட்ட இருவருக்கு மட்டுமே புரியும் சிருங்காரமான சிரிப்பு... நெருப்பாக அவர் காதுகளில் பட வேகமாக உள்ளே நுழைந்தார்.

அவர் எண்ணியது முற்றிலும் சரியாகவே தான் இருந்தது. அவனுக்காகவே அலங்கரித்துக் கொண்டவள் போல சந்தியா மாதுளம்பூ வண்ண மல்மல் சேலையில்...மையுண்ட கண்கள் பளபளக்க... அவனுக்குக் காப்பி பலகாரம் பரிமாறிக் கொண்டிருந்தாள். அவர் வந்ததைக்கூட கவனியாமல் இருவரும் சிரித்துக் கொண்டிருந்தனர். அப்படி என்ன வேண்டிக் கிடக்கிறது ஒரு சிரிப்பு?

''என்ன டாக்டர்?.... பார்த்து ரொம்ப நாளாச்சு — பிராக்டீஸெல்லாம் எப்படி? எங்கே இப்படி இந்தப் பக்கம்?... அத்தையம்மாளுக்கு உடம்புக்கு ஏதாச்சும்?...'' ஏளனமான குரலில் விசாரித்தார்.

வெகு தொலைவிலேயே அவர் வருவதைக் கண்டுகொண்டுவிட்ட ஜகதா ஓட்டமும் நடையுமாக மூச்சிரைக்க உள்ளே வந்தாள். அவர் பேசியது அவளுக்கு நன்றாகவே கேட்டது.

''வாப்பா குமரேசா! ரொம்ப நாளாச்சு. எங்களையெல்லாம் மறந்துட்டியோன்னுகூடக் கவலையா இருந்தது. சூரியா குழந்தைங்க எல்லாரும் சுகம்தானே... என் உடம்புக்கு ஒன்னுமில்லே. நல்லாத்தான் இருக்கேன். டாக்டர் இந்தப் பக்கம் போனார். நான்தான் கூப்பிட்டேன். நீயும் காப்பி பலகாரம் சாப்பிடுப்பா. உனக்குப் பிடிச்ச வெள்ளைப் பணியாரம் பண்ணியிருக்கேன்'' என்றாள்.

'இவன் தின்னது போக மீதியைச் சாப்பிட வேண்டுமா.. அப்படி ஒன்றும் வெள்ளைப் பணியாரத்துக்கு விங்கிப்போய்க் கிடக்கலே....'

''சாப்பிட்டுட்டுத்தான் கிளம்பினேன். சும்மா உங்களையெல்லாம் பார்த்துட்டுப்

புதிய
கோல்கேட் ஃப்ளோரிகார்ட் டூத்பேஸ்ட்

# பல்லுக்கு உறுதி தருவது









ஃப்ளோரிகார்டில் உள்ள எம்
எஃப்பி ஃப்ளோரைட் எனுமலுடன் இணைந்து துவாரங்களுக்கும்,
சிதைவுக்கும் எதிராக உங்கள் பற்களை உறுதிப்படுத்துகிறது.

தமிழ்நாடு, கேரள மாநிலங்களிலும், கர்நாடகத்தில் குறிப்பிட்ட சில மார்க்கெட்டுகளிலும் இப்போது கிடைக்கும்.

CFT.G.3 TM

தேவி பாரடைஸ் A/C

பாண்டியன்

முரளிகிருஷ்ணா A/C

வெற்றியடையிற ஒவ்வொரு மனிதன் பின்னாலும்
ஒரு பெண் காரணகர்த்தாவாக நிற்கிறாள்
என்ற முதுமொழியை தனிகாட்டுராஜாவில்
படம் பிடித்து காட்டியுள்ளனர்.






சுரேஷ்
புரொடக்ஷன்ஸாரின்

# தனிகாட்டு ராஜா

D. ராமாநாயுடு
V.C. குகநாதன்

போகலாம்னு வந்தேன்.... அவ்வளவுதான்'' என்றார் அழுத்தலாக.

சிறிது பொழுதில் ஸ்ரீதரன் விடை பெற்றுக் கொண்டு வெளியேறியதும் ஊஞ்சலினின்று தொப்பென்று குதித்தார் குமரேசன்.

கோபத்துடன் சரிகை அங்கவஸ்திரத்தை உதறிப் போட்டுக் கொண்டார். ''நாங்கள்ளாம் மானம் மரியாதையோட வாழறது உங்களுக்குப் பிடிக்கலையா? சும்மாத்தான் கேக்கறேன்....'' உரத்த குரலில் ஆத்திரமாகக் கூச்சலிட்டார்.

ஜகதாவுக்கு அவரது கோபாவேசத்தின் காரணம் நன்றாகவே புரிந்து விட்டிருந்தது. ஆனாலும் தெரியாதவள் போலக் கேட்டாள்.

''குமரேசு! குழப்பாதேயப்பா... புரியும்படி சொல்லு.''

''அந்த டாக்டர் பயலுக்குக் காலை வேளையில இங்கென்ன வேலை? அடிக்கடி வரதாகக் கேள்விப்பட்டேன்.... இப்போ கண்ணாலேயே பார்த்துட்டேன்....''

''நம்ப உறவுக்காரன்னு நீதானே சொன்னே?... நல்ல பையன்னு நீயே புகழ்ந்தே... தாயில்லாத பிள்ளைன்னு என் மனத்திலே அவன் மேலே கொஞ்சம் இரக்கம் வந்தது. அது தப்பா... நேத்திக்குக் கோயிலிலே பார்த்தேன். வீட்டுக்கு வாப்பா காப்பி பலகாரம் சாப்பிட்டுட்டுப் போன்னு நான்தான் கூப்பிட்டேன். இதிலே என்ன பிசகு கண்டுட்டே?''

''அவனை இந்தப் பக்கம் அடிக்கடி கூப்பிடாதீங்க.... சொல்லிட்டேன். நம்ப குடும்பக் கௌரவம் குலைஞ்சு போயிடும்.''

''நீதானே அவனுக்குக் கல்யாணம் பேச அன்னிக்குக் காரைப்போட்டுக்கிட்டு ஓடி வந்தே... வீரன் — சூரன் — தீரன்னு பேசினே! இன்னிக்கு இப்படி இகழ்ச்சியாப் பேசறே... எனக்கு ஒண்ணுமே புரியலையே....''

''எனக்கே அப்புறம்தானே புரிஞ்சுது.... இந்தப் பயலோட பேச்சையும் எடுப்பான தோற்றத்தையும் பார்த்துட்டு நான் அசந்து போயிட்டேன். அப்புறம் உண்மை தெரிஞ்சுது. இவனுக்கு ஏற்கனவே பட்டணத்தில ஒரு நர்ஸ் பொண்ணோட தொடர்பு இருக்கு. அவளைக் கட்டிக்கப் போவதாக வாக்குக் கொடுத்துட்டு அவளைக் கைவிட்டுட்டுக் கிராமத்திலே வந்து ஒளிஞ்சுகொண்டிருக்கான். அங்கே திரும்பிப் போனா அந்த நர்ஸ் பொண்ணோட அண்ணன் செமத்தியா உதை கொடுப்பான்னு பயம். இதை எப்படியோ நம்ம மல்லிகா தியேட்டர்காரர் தெரிஞ்சுகிட்டார். இந்த இடம் வேணாம் குமரேசா வேறே வரன் பார்னு ஒரேயடியா மறுத்துட்டார்....''

குமரேசன் விடை பெற்றுக் கொண்டு காரில் கிளம்பிப் போய் விட்டார்.

''அவன் கிடக்கான் பொறாமை பிடிச்சவன்'' — அத்தை ஜகதா ஆறுதலாகச் சொன்னாள். ஆனால் சந்தியாவின் கண்கள் அவளையும் மீறிக் கலங்கிப் போயின. அத்தான் குமரேசன் ஆயிரம் பொய்களைச் சொல்லக்கூடியவர்தான். ஆனால் அவை நடுவே சில உண்மையும் சில சமயம் சொல்லித் தொலைப்பது வழக்கம். ஒருவேளை... அவர் கூறியதில் உண்மை இருந்தால்?... முள்ளாக நெஞ்சை ஒரு சந்தேகப் பொறி நெருடுவதை உணர்ந்தாள்.

(தொடரும்)

கதை: அபர்ணா நாயுடு



நித்யா! என்னை மன்னிச்சுடு. உனக்கு- உன் நினைவுக்கு- இப்போ நான் செய்யப் போறது துரோகமான காரியம் தான். ஆனாலும், உண்மையைக் கண்டு பிடிக்க நான் இவ மனசை சலனப் படுத்தித்தான் ஆகணும்...




மன இறுக்கம், உடல் சோர்வு எல்லாத்துக்குமே மருந்து என்னோட விரல்கள். மிருதுவாத் தடவி, பக்குவமாப் பிடிச்சு விட்டேன்னா ... உங்களுக்குப் பறக்கற மாதிரி ஃபீலிங் உண்டாகும்...




ரோஸி! இப்படி ஒரு இதத்தை நான் இது வரைக்கும் அனுபவிச்சதே இல்லை. இந்தக் குளுமையான சூழ்நிலை, அழகான நீ, மிருதுவான உன் விரல்கள், இந்தத் தனிமை...




ரமேஷ்! என்மேலே சபலப் படாதவங்களே இல்லை. நான் தான் யாருக்கும் இது வரைக்கும் இடம் கொடுத்ததே இல்லை. ஏன் தெரியுமா?
ஏன்?




அழகும் ஆண்மையும் மட்டும் இருந்தாப் போறாது. அறிவும் நிறைஞ்சு இருக்கணும். அப்படிப்பட்ட ஆணைத்தான் எனக்குப் பிடிக்கும். அது உங்க கிட்டே இருக்கு ரமேஷ் அதனாலே...


அதுதானே, இனிமே நீங்க எங்கேயும் தப்பிச்சுப் போக முடியாது.... பாபு! உள்ளே வா!


இவன் தானே அந்தப் புரொபசர் — நம்ம செட் அப்பிலேருந்து தப்பிச்ச முதல் ஆளு!
உன் பஸ்ஸர் சத்தம் கேட்டு மாடியிலிருந்து நாங்க வந்தப்போ, இவ போன் பண்ண ட்ரை பண்ணிக் கிட்டிருந்தா. கப்புனு பிடிச்சுட்டோம்.


ரோஸி! நீ இவ்வளவு மோசமானவள்னு நான் நினைக்கவே இல்லே. இதுக்கெல்லாம் நீ பதில் சொல்லித்தான் ஆகணும்.


ஏ பொண்ணு! சொல்ல வேண்டிய இடத்திலே பதில் சொல்லப் போறது இந்தப் புரொபசர் தான். அது வரைக்கும் நீ வாயை மூடிக்கிட்டு இரு...


மிஸ்டர்! உன் ஸ்டண்ட் வேலையெல்லாம் பிரயோஜனம் இல்லே. இப்போ எங்க பாஸ் கிட்டே நாம போறோம். இடுப்பிலே இருக்கிற டவலோட வா. அப்போ தான் நீ தப்பிச்சு ஓட முயல மாட்டே!
தொடரும்

# அரங்கன் கோபுரம் உயருகிறது!

விஜயநகர மன்னர்கள் காலம் தொட்டு 'மொட்டைக் கோபுரம்' என்று அழைக்கப்பட்டு வந்த ஸ்ரீரங்கம் பெருமாள் கோயிலின் தென் திசைக் கோபுரம் அஹோபில மடத்தின் 44வது ஜீயராக அருளிக் கொண்டிருக்கும் ஸ்ரீ அழகிய சிங்கரின் பெருமுயற்சியால் வளரத் தொடங்கி வரப்போகும் தமிழ் வருஷப் பிறப்பு சமயம் நாலாவது நிலை பூர்த்தியாகும் கட்டத்தில் உள்ளது. கோபுரப் பணி முடிவுற்றால் கோபுரத்தின் உயரம் 226 அடி. 13 நிலைகள் உள்ளதாக இருக்கும். சுமார் ஒரு கோடி ரூபாய்க்கு மேலாகச் செலவு. இக் கோபுரம்தான் இந்தியாவிலேயே மிக உயரமான கோபுரமாக விளங்கும். ஸ்ரீ அழகியசிங்கர், ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராச்சாரியார், ஸ்ரீமத் ஆண்டவன் ஸ்வாமிகள், ஆகியோருடன் ஆந்திர அரசாங்கமும் ஒத்துழைக்க நான்கு நிலைகள் நிறைவுற்று உள்ளன. கோபுரத் திருப்பணியை நேரடியாக மேற்பார்வையிட்டு வருகிறார், அஹோபில மட ஜீயர். 87 வயதான நிலையிலும் தினமும் 'லிஃப்ட்' உதவியால் மேலே போய்க் கட்டிட வேலையைக் கண்காணித்து வருகிறார். கோபுரத் திருப்பணி சம்பந்தமாகவும் வேறுசில பொது விஷயங்களைப் பற்றியும் அவரது அருள் விளக்கங்களைக் கேட்டபோது அவர் அளித்த பதில்கள் இங்கு தரப்பட்டுள்ளன. ஜீயரின் கருத்துக்கள் ஒன்றிரண்டை ஜீரணிப்பது சிலருக்குச் சிரமமானாலும் பெரியவரது எண்ணங்களுக்கு மதிப்பளித்து அவையும் இங்கு பிரசுரமாகின்றன.

*கேள்வி:* மொத்தம் 108 வைஷ்ணவ ஸ்தலங்கள் உள்ளதாகவும், அவற்றில் பாதிக்கு மேல் பாழடைந்து க்ஷீண தசையில் உள்ளதாகவும் கூறுகிறீர்களே! அம்மாதிரி க்ஷீணமான தசையில் உள்ள ஒரு கோயிலைப் புதுப்பிக்காமல், ஏற்கனவே நல்ல நிலையில் உள்ள ஸ்ரீரங்கம் பெருமாள் கோயில் கோபுரத் திருப்பணியில் ஈடுபடுவானேன்?

*பதில்:* ஒரு நல்ல காரியம் செய்யாவிட்டால் ஏன் செய்யவில்லை என்று கேட்பது சகஜம்... நல்ல காரியம் செய்யும்போது ஏன், இதைச் செய்வானேன் என்று கேட்பது ருசிகரமான கேள்வியாக எனக்குப் படவில்லை. இதை விடுத்து வேறொரு கோயில் திருப்பணியை மேற்கொண்டிருந்தாலும் இதை மட்டும் செய்வானேன் என்றுதான் கேட்பார்கள். இப்பணியைச் செய்யச் சொல்லிப் பெருமாள் கட்டளை இட்டிருக்கிறார். செய்கிறேன். இது முடிந்ததும் வேறு திருப்பணிகளை மேற்கொள்ளலாம். ஸ்ரீரங்கம் முதல் க்ஷேத்திரம். ரொம்ப நாள் மொட்டைக் கோபுரமாகவே இருந்தது. இக்கோபுரத்தைக் கட்டும் விஷயத்தில் ஸ்ரீ சங்கராச்சார்யாளுக்கும் அபிப்பிராயம் இருப்பதாகத் தெரிந்தது. இதை ஆரம்பிச்சா எல்லாரும் உதவுவாள்னு தோணித்து... ஆரம்பிச்சேன்.... பெருமாள் கிருபையாலே நடந்துண்டு இருக்கு....

*கேள்வி:* இது மாதிரி கோபுரத்துக்கு லட்சக் கணக்கில் செலவழிப்பதற்குப் பதிலாக ஒரு தொழிற்சாலை அமைத்தால் ஆயிரக் கணக்கான குடும்பங்கள் வேலை வாய்ப்புக் கிடைத்துப் பிழைக்கும் என்று ஒரு சாரார் வாதம் செய்கிறார்களே!



✠ அரங்கன் கோபுரம் உயர்கிறது

*பதில்:* திருப்பதிலே மலைமேலே, காட்டிலே, கோடிக் கணக்கில் பணத்தைக் கொட்டி, வீடு கட்டறாங்களே அதைப் பத்தி யாரும் கேட்க மாட்டேங்கறாங்களே! சர்க்கார்லே பல கட்டிடங்களை இடிச்சு இடிச்சுக் கட்டறாங்களே... அந்தப் பணம் இருந்தா குடும்பங்கள் பிழைக்காதா? ஆயிரம் ரூபாய்க்கு மேல் கொடுக்கிற சம்பளத்தைக் குறைத்து ஏழைகளுக்குச் செஞ்சாக் கூட எவ்வளவோ குடும்பம் பிழைக்கும்! மூவாயிரம்நாலாயிரம்னு சம்பளம் கொடுக்கறாங்களே அது அவசியமா?...எல்லாருக்கும் ஒரே சமமா சாப்பாட்டுக்கு சம்பளம் கொடு... இவன் என்ன ஒஸ்தி அவன் என்ன மட்டம்? அதை யெல்லாம் எழுதாம இதை மாத்திரம் வந்து கேளுங்கோ... கட்டிடம் கட்டறவன், சுண்ணா போடறவன், மணல் சப்ளை செய்யறவன், வேலையாட்கள் இப்படி ஆயிரக் கணக்கில் இங்கேயும்தான் பிழைக்கிறாங்க. அதோடு புண்யம்...

*கேள்வி:* கோயில் கோபுரத் திருப்பணிக்கு, வைஷ்ணவத்திலே நம்பிக்கை இல்லாத மேலை நாட்டு மக்களின் விதேசிப் பணம் வருகிறதே, அந்தப் பணத்தைக் கொண்டு கோபுரம் கட்டுவது சரியா?

*பதில்:* ஏன் அந்தப் பணம் கோபுரத்தில் சேராதா என்ன? அமெரிக்கா, லண்டன் இப்படிப் பல இடங்களிலேருந்து நன்கொடை வரது... ஒரு முஸ்லிம் கூட ஆயிரம் ரூபாய் அனுப்பினார். இன்னார்னு கிடையாது. யார் அனுப்பினாலும் வாங்கிக்கிறோம்...

கேள்வி: ஸ்ரீ சங்கராச்சார்யாள் இந்தக் கோபுரத்தில் மூன்றாவது கட்டத்துக்குப் பண உதவி செய்திருக்கிறார்... பல சைவர்களும் பெருமாள் திருப்பணிகளுக்கு உதவுகிறார்கள்,... இது மாதிரி வைஷ்ணவப் பெரியார்கள் ஏன் சைவ ஸ்தலப் பணிகளுக்கு உதவக் கூடாது?

பதில்: எவ்வளவோ வைஷ்ணவர்கள் செய்யறாங்களே,... விவரம் தெரியாம செய்யறாங்க! நீ செய்வயான்னு என்னைக் கேளு.

கேள்வி: நான் கேட்டதற்கு 'அதுதான் அர்த்தம். நீங்க செய்விங்களா?

பதில்: நான் சிவன் கோயில்களுக்குச் செய்ய மாட்டேன்.... ஏன்னு கேட்டா... ஸ்ரீமத் நாராயணன்தான் எல்லா தெய்வங்களுக்கும் மேற்பட்ட தெய்வம்னு என்னுடை சித்தாந்தம்... பிரம்மாவை நாராயணன் தன் நாபியிலிருந்து படைத்தான். அந்த பிரும்மா சங்கரனைப் படைத்தான் என்று கதை இருக்கு.... அதுபடி பார்த்தா சங்கரனுக்கு நாராயணன் பாட்டன் ஆகிறார். பிரம்மா—பிள்ளை ஆகணும்... அவங்களும் தெய்வம்தான். தபஸ் பண்ணி பிரம்மா அந்தப் பதவிக்கு வந்தார்னும், அதேபோல சிவன் எத்தனையோ யாகம் பண்ணி, கடைசியிலே தானும் நெருப்பிலே குதித்துச் சக்தி பெற்றார்னு சாஸ்திரம் இருக்கு... இவங்கள்ளாம் புண்ணியம் பண்ணி, தபஸ் பண்ணி தெய்வத் தன்மைக்கு உயர்ந்தவர்கள். நாராயணன் எப்போதும் உள்ளவர். பாக்கிப் பேருக்குப் பலன் கொடுக்கிறவர்... அவரை வழிபடற நாங்கள் வேறு தெய்வத்தை வழிபட மாட்டோம்,... நாராயணனைத் தெய்வமாக வழிபட்டு மோட்சத்துக்குப் போக வழி செய்து கொண்டவர்கள், நான்தான் தெய்வம் என்று சொல்லிக் கொள்கிற வேறு தெய்வத்தை வணங்கக் கூடாது. அப்படி எங்களுக்குச் சட்டம் இருக்கு. ஏன்னு அங்கே போனா புத்தி கெட்டுப் போகும். நாங்கள் ளாம் மோட்சத்துக்குப் போக டிக்கட் வாங்கிண்டாச்சு... அதனாலே சிவன் கோயில் திருப்பணிக்கு பணம் இருந்தாலும் தர மாட்டேன்.... அவங்க தராங்களே வாங்கிக்கலாமான்னு கேட்டால்... சிவனுக்கு ஸ்ரீமத் நாராயணன் பாட்டனாராவார், அதனாலே பிரியத்தோட அவா தரா... அதை வாங்கிக்கலாம்...

கேள்வி: வைஷ்ணவங்களுக்குள்ளே வடகலை தென் கலை சண்டை ரொம்ப ஜாஸ்தியாயிடுத்தே... கோர்ட் வரை போகிற அளவுக்கு அசிங்கமாயிடுத்தே...

பதில்: எங்க மடத்தைப் பொறுத்த மட்டில் வடகலை தென் கலை வித்தியாசம் கிடையாது. வடகலையாரும் சிஷ்யாளா இருக்கா... தென் கலையாரும் சிஷ்யாளா இருக்கா... ஸ்மார்த்தாளும் சிஷ்யாளா இருக்கா....

கேள்வி: திருப்பதி கோவில்லே மணவாள மாமுனி ஸ்லோகம்தான் சொல்லணும்னு ஒரு கோஷ்டி, வேதாந்த தேசிகர் ஸ்லோகம் சொல்லணும்னு ஒரு கோஷ்டி... இப்படியா

✖ கோபுர வேலை நடக்கிறது



சண்டை நடக்கிறது... காஞ்சிபுரத்துலேயும் யானைக்கு வடகலை நாமமா தென்கலை நாமமா என்ற சண்டை... இதெல்லாம் சரியா....

பதில்: இதெல்லாம் பக்தியினாலே வரது. ஒவ்வொரு கோயில்லே ஒவ்வொரு பிரிவுக்கு பாத்தியதை உண்டு... ஸ்ரீரங்கம் கோயில்லே தென்கலையாருக்குப் பாத்தியதை ஜாஸ்தி... வடகலையார் பாராயணம் வேணா சொல்லலாம்னு கொண்டு வந்திருக்கா. ஆனா பெருமாளுக்கு வடகலை நாமம் போடக் கூடாது. நான் போட்டுண்டு இருக்கிற நாமத்தை, வடகலை நாமத்தைப் போடக் கூடாது... பெருமாளுக்குக் கோபுரம் கட்டறேன்... வடகலை நாமம் போட்டுத்தான் ஆகணும்னு பாத்தியதையை மீறி நான் கேட்டாத்தான் அனாவசியப் பிரச்னை வரும்... பெருமாளைச் சேவிக்கிறதுக்கு இவாளும் வரலாம், அவாளும் வரலாம். யாரும் தடுக்கப் போறதில்லே. கோயில் கட்டின நாள்லேந்து கஷ்டப்பட்டுப் பாதுகாத்து வந்ததன் மூலமா ஒரு சாரா ருக்குப் பாத்தியதை இருக்கும். மத்தவா அதை மீறி நான் சொல்றபடிதான் செய்யணும்னு சொல்லச்சேதான் பிரச்னை உருவாகறது. இதையெல்லாம் சண்டையா, வன்மமா எடுத்துக்கக் கூடாது... பெருமாள் மேலே உள்ள பக்தியினாலே, பிரியத்தினாலே வர மோதல்கள்....

கேள்வி: மனசு நிம்மதிக்காக பெருமாளை சேவிக்கக் கோவிலுக்குப் போகிறோம்... இது மாதிரியான சண்டைகளைக் காணும்போது கோயிலுக்கு அவசியம் போகத்தான் வேண்டுமா.... வீட்டிலேயே வழிபடலாமே என்று தோன்றிவிடுகிறதே!

பதில்: நீ பெருமாளைச் சேவிக்கப் போனால் நமஸ்கரிச்சுட்டு வரவேண்டியதுதானே...... இதையெல்லாம் எதுக்குக் கவனிக்கணும்... உன் பக்தியைச் சோதனை பண்ணறதுக்கு பகவானே இது மாதிரி தடங்கல்களை ஒரு வேளை கொடுத்திருக்கலாம். நீ பாட்டுக்கு பகவானை மட்டுமே மனத்தில் நிறுத்தி தியானிக்க வேண்டியதுதானே!

கேள்வி: 'ஹரே கிருஷ்ணா' என்று ஓர் இயக்கம் அமெரிக்காவில் தோன்றி உலகமெங்கும் பரவி வருகிறதே... இந்தியாவில் கூட இவ்வியக்கத்தினர் சுற்றுகிறார்களே!

பதில்: நாமம் இட்டுக் கொண்டு, குடுமி வைத்துக் கொண்டு காவி உடுத்து இங்கேயும் ஒருத்தன் வந்தான்... வாயெல்லாம் மந்திரங்கள்... பெருமான் பெயரையே சொல்லிண்டு இருக்கான்... பூணூல் போட்டிருக்கான். உட்காரச் சொல்லிச் சாப்பாடு போட்டேன். உபசரித்து அனுப்பினேன். அவ்வளவுதான். பூணூல் போட்டதனால் மட்டுமே ஒருவன் பிராமணனாகிவிட மாட்டான். அவனவன் பிறப்பால் எதுவோ அதுதான் சாஸ்வதம். நல்ல காரியங்கள் செய்து பகவான் பெயரைத் தியானிக்கிறதனாலே அவனது ஜாதிக்குள் உயர்ந்தவனாகிறான்....

கேள்வி: நரசிம்மர்... ஹனுமார்... ஆவாஹனம் ஆவதாகக் கூறிச் சில பேர் எதிர்காலத்தைப் பற்றிக் குறி கூறுகிறார்களே?

பதில்: ஒருவருக்கு பிசாசு பிடித்ததாகக் கூறுகிறோம். ஆவேசம் வந்து ஆடுகிறார். மந்திரவாதி வந்து ஏதேதோ ஜபிக்கிறான். 'போய்விடுகிறேன்' என்கிறது பிசாசு. போவதற்கு அடையாளமாக மரக் கிளையை முறித்துவிட்டுப் போ என்றதும் 'தடதட' வென்று மரக் கிளை தானாக முறிகிறது... இது மாதிரி பிசாசை நாம் நம்பும்போது அதையும் நம்ப வேண்டும். நரசிம்மர், ஹனுமார் மேலே உள்ள பக்தியினாலே சில பேருக்கு ஆவேசம் வருகிறது. குறி சொல்கிறார்கள். நம்ப வேண்டியதுதானே!

பேட்டி: **பி. ரங்கநாயகி**
புகைப்படம்: **மன்னை மூர்த்தி**

[கோபுரத் திருப்பணிக்குப் பணம் அனுப்ப விரும்புவோர் 'அஹோபில மடம், ஸ்ரீரங்கம்' என்ற விலாசத்துக்கு அனுப்பலாம்.]

# பொக்கிஷம்



ராஜாஜிக்கும் இன்று தமிழ்ப் பழங்கலை இயக்குனராகப் பொறுப்பேற்றிருக்கும் திரு மீ. ப. சோமுவுக்கும் இடையில் நிலவிய நெருங்கிய நட்புறவு அனைவரும் அறிந்ததே. எனவே அவர் பொக்கிஷமாகக் கருதும் ராஜாஜியின் கடிதம் ஏதும் இருக்குமே என்ற எண்ணத்தில் மீ. ப. சோமுவை அணுகினேன். அவரோ ஒரு பொக்கிஷப் பேழையையே காண்பித்தார். பெரிய டிரங்குப்பெட்டி நிறையக் கடிதங்கள், கடிதங்கள்! ராஜாஜி, டி. கே. சி., கல்கி, தீபன், புதுமைப் பித்தன் இன்னும் பல அறிஞர்களின் கடிதங்கள். ''நீங்களே ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொடுங்கள்'' என்றேன்.



சற்று நேரம் யோசித்து விட்டு சோமு ஒரு கடிதத்தை எடுத்துத் தந்தார். ''மற்ற எல்லாவற்றையும் ஒதுக்கி இந்த ஒன்றை ஏன் தேர்ந்தெடுத்தேன் தெரியுமா?'' என்று காரணத்தைச் சொல்ல ஆரம்பித்தார்:

''ராஜாஜி முக்கியமான எதையாவது நினைத்து விட்டால் மறந்து போகு முன் உடனே அதை ஒரு தாளில் எழுதித் தபாலில் எனக்கு அனுப்பி விடுவார். அதனால்தான் தினமும் சந்தித்து வந்த கால கட்டத்திலும் கூட எனக்குப் பல கடிதங்கள் எழுதியுள்ளார்! அந்த வகையில் அவர் எழுதிய ஒரு கடிதம் இது. அது மட்டுமல்ல, அந்த உலக மகா மேதையின் அடக்கத்தையும், எளிமையையும் பிறரை மதிக்கின்ற பண்பையும் உணர்த்துகின்ற கடிதமாகவும் இது விளங்குகிறது.

''ஞானத்தை விட பக்தியே முக்கியம் என்றும் பக்தியை வளர்ப்பதன் மூலமே மக்களிடம் நன்னெறிகளை வளர்க்க முடியும் என்றும் அடிக்கடி சொன்ன அந்த ஞானப் பேரொளி ஒரு சமயம் நோயுற்று உடல் தேறியதும் திருப்பதி ஆண்டவனின் திருவருளுக்கு நன்றி சொல்லி ஒரு பாடல் புனைந்தார்.

''பாடலை எழுதியதும் அப்படியே அவர் அதைக் கல்கியில் பிரசுரிக்க அனுப்பியிருக்கலாம். ஆனால் அவர் அப்படிச் செய்யாமல் என்னிடம் அனுப்பினார், ஒரு கடிதத்துடன் இணைத்து. அந்தக் கடிதத்தையும் அதன் தமிழாக்கத்தையும் தருகிறேன்.

'' 'குறையொன்றுமில்லை, மறைமூர்த்தி கண்ணா' எனத் தொடங்கும் ராஜாஜியின் அந்தப் பாடல் கல்கியில் பிரசுரமானது மட்டுமல்ல, அந்தப் பிரசுரத்தில் 'நன்றி: சோமு' என்று ஒரு அடிக் குறிப்பும் வெளியிட்டார்! இந்தப் பாடல் அண்மைக் காலமாக எம். எஸ். அவர்களின் தெய்வீகக் குரலில் அடிக்கடி அரங்கேறியும் வருகிறது. எம். எஸ். வழங்கியுள்ள ஸ்ரீ வேங்கடேசுவர பஞ்சரத்ன மாலா இசைத்தட்டுக்களுள் ஒன்றில் இடம் பெற்றும் உள்ளது.''

பேட்டி: **சந்திரமௌலி**

24. 11. 66

My dear Somu:

Enclosed jingles have been running in my brain these few days. If published as they are they can be deemed new style non-conformist verses. But they may be put in order by you. If you consider them fit enough for publication in Kalki — I wish to say these words in gratitude to the God in Tirupati.

Yours

C.R.

எனது அன்பான சோமு,

இத்துடன் இணைத்துள்ள சில சொல்லடுக்குகள் கடந்த சில தினங்களாக என் மனத்தில் ஒலித்துக் கொண்டே இருக்கின்றன. இப்போதுள்ள வடிவில் பிரசுரமானால் மரபு சாராத புதுக் கவிதை எனக் கருதப்படலாம்!! ஆனால் நீங்கள் இவற்றைக் கல்கியில் பிரசுரிக்கப் போதிய தகுதியுள்ளனவாகக் கருதினால் நீங்கள் இவற்றைச் சீர்படுத்திவிடலாம். இந்த மொழிகளைத் திருப்பதியில் உள்ள இறைவனுக்கு என் நன்றிக் காணிக்கையாகச் சொல்ல விரும்புகிறேன்.

உங்களுடைய,

சி. ஆர்.

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543)

Assistant Editor: P.S. Mani Layout Artist: Nambi Editor: K. Rajendran

